# அனாதைச் சிறார்களுக்குப் புகலிடம்

ஸ்ரீராமகிருஷ்ண குடிலில் உணவு, உடை, இருப்பிடம், மருத்துவம், படிப்பு, உழைப்பின் மூலம் வாழ்க்கைமுறைப் பயிற்சி ஆகியன யாவும் முற்றும் இலவசமாய் வழங்கி அனாதைச் சிறார்களைப் பரிபாலிக்கப்பெற்று வருகிறது.

ஆகையால் அனாதைச் சிறார்களின் வாழ்வில் அக்கறையுள்ள பொதுமக்கள், பொது மன்றங்கள், சமூக சேவையாளர்கள், அரசு அதிகாரிகள், ஆசிரியர்கள் ஆகியோர் தாயும் தந்தையும் இருவருமே இல்லாத திக்கற்ற ஏழை அனாதைச் சிறார்களைப்பற்றி இங்குக் கடிதம் எழுதினால் அதற்கான அரசு விதிப்படியுள்ள அச்சுப்பாரங்கள் அனுப்பி வைக்கப்படும். ஜூன் மாதம் பள்ளி திறக்கப்படுவதால், சம்பந்தப்பட்டவர்கள் இப்போதிருந்தே மனுக்கள் அனுப்பி வைத்தால் பரிசீலனை செய்து ஜூன், ஜூலை மாதங்களில் பள்ளியில் சேர்த்துக் கொள்ள வசதியாயிருக்கும். முதல் வகுப்பிலிருந்து எட்டாம் வகுப்பு வரை சிறுவர்கள் மட்டுமே சேருவதற்கு மனு செய்யலாம். தாய் தந்தையர் யாரொருவர் இருந்தாலும், சிறுமிகளாயிருந்தாலும் மனு செய்யாதீர்கள்.

சிறுவர்களை இங்குக் கொண்டு வந்து சேர்த்துவிடுவதற்காக ஏற்படும் பிரயாணச் செலவுகளும் அவசியமானவர்களுக்கு வழங்கப்படும்.

இங்கு உயர்நிலைக் கல்வி படித்து முடிந்தானபின் அந்த அந்த மாணவர்களின் கல்வித் தகுதிக்கேற்ப ஐ. டி. ஐ. பாலிடெக்னிக் ஆகிய தொழிற்பயிற்சி நிறுவனங்களில் சேர்த்துவிட்டுத் தொழிற்பயிற்சி பெறவும் உதவி செய்ய, குடிலில் அறக்கட்டளையும் இருந்து வருகிறது.

தலைவர்,<br>
ஸ்ரீராமகிருஷ்ண குடில்,<br>
திருப்பராய்த்துறை-639115<br>
திருச்சி மாவட்டம்




**STANDARD-20 233D MINI LORRY**

**with new features — more value for money.**

Also available in other factory built body ranges as Delivery van—Utility van — Executive van — Ambulance — Mini-bus — School bus, etc.

Manufactured by :

**STANDARD MOTOR PRODUCTS OF INDIA LTD.,**

134, Mount Road, Madras 600 002.

ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் ACC NO 98704

| தொகுதி 62 | ஜூன்—1982 | இதழ் 6 |
| --- | --- | --- |

31/5/82

## பொருளடக்கம்




## கிராம மருத்துவப் பணி

வட ஆற்காடு மாவட்டத்தைச் சேர்ந்த நாட்டரம்பள்ளிப் பகுதியில் ஒரு நடமாடும் மருத்துவ வேன் இயங்கி வருகிறது. 30 கிலோ மீட்டர் சுற்று வட்டாரத்தில் 25,000 ஜனத்தொகையைக் கொண்ட 20 கிராமங்களில் இந்த மருத்துவத் தொண்டு நடைபெற்று வருகிறது.

மூன்று டாக்டர்களையும் மற்றும் தேவையான சிப்பந்திகளையும் கொண்டு செயற்பட்டு வரும் இந்த மருத்துவப் பணிக்கு வருடச் செலவு ரூ. ஒரு லட்சம் ஆகும்.

இந்த மருத்துவப் பணிக்குத் தாராளமாக நன்கொடை வழங்கக் கோருகிறோம். இந்தப் பணிக்கு 35 CCA பிரிவின்படி 100 சதவிகிதம் வருமான வரி விலக்கு உண்டு.

நன்கொடையைச் செக் அல்லது டிராப்ட் மூலம் 'ஸ்ரீராமகிருஷ்ண மடம், மயிலாப்பூர், சென்னை - 600 004' என்ற முகவரிக்கு அனுப்பக் கோருகிறோம்.

திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி

# ஸ்ரீவேங்கடேசப் பெருமாள் ஊஞ்சல் சேவை

ஸ்ரீவேங்கடேசப் பெருமாள் எல்லாக் குணங்களையும் அவஸ்தைகளையும் கடந்து விளங்குகிறார். அவர் அவற்றால் பாதிக்கப்படவில்லை; அவைகள் அவரைப் பாதிக்கவும் முடியாது. ஆனால், பக்தர்கள் அந்த ஒப்பற்ற பரம் பொருளைத் தங்கள் உள்ளத்திலேயே உணர்ந்து அனுபவிக்கிறார்கள். ஆகையால் பக்தர்கள், ஸ்ரீவேங்கடேசப் பெருமாள் எப்போதும் உற்சாகமாகவும் சந்தோஷமாகவும் கவலையற்றும் இருந்து, தங்களுக்கு எல்லாவிதமான சௌகரியங்களையும் சௌபாக்கியங்களையும் க்ஷேமங்களையும் கொடுத்துக்கொண்டிருக்க வேண்டுமென்று விரும்புகிறார்கள்.

இதுதான் திருமலையில் கண்ணாடி ஹால் எனப்படும் அயன மஹாலில் நாள்தோறும் நடத்தப்படும் ஊஞ்சல் சேவையின் தாத்பரியமாகும். இந்தச் சேவை ஒவ்வொரு நாளும் மாலையில் ஆறு மணிக்குப் பிறகு நடந்து வருகிறது. உற்சவ மூர்த்தி அழகாக அலங்கரிக்கப்பெற்ற ஊஞ்சலில் தம் தேவிமார்களுடன் எழுந்தருளுகிறார். கந்தம், சாமர உபசாரங்கள், வேதபாராயணம், பஜனை ஆகியவற்றுடன் ஸ்வாமி லேசாக ஊஞ்சல் ஆடுகிறார்.

மேற்கண்ட ஊஞ்சல் சேவை உற்சவத்தில் பங்குகொள்ள விரும்பும் கிருகஸ்தர்கள் ரூ. 1000 செலுத்தித் தங்கள் குடும்பத்தில் ஆறு பேர்களுடன் இந்த உற்சவத்தில் கலந்துகொள்ளலாம்.

எக்ஸிக்யுட்டிவ் ஆபீசர்,

**திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி**

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

RAMAKRISHNA MATH

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை.
—திருமூலர்

தொகுதி 62 | துந்துபி ஞு ஆனி மீ | இதழ் 6



KOVILOOR ANDAVAR LIBRARY, KOVILOOR
A. No. 38704


## பிரார்த்தனை

यत्रैव यत्रैव मनो मदीयं तत्रैव तत्रैव तव स्वरूपम् ।
यत्रैव यत्रैव शिरो मदीयं तत्रैव तत्रैव पदद्वयं ते ॥

யத்ரைவ யத்ரைவ மஞே மதீயம்
தத்ரைவ தத்ரைவ தவ ஸ்வரூபம் |
யத்ரைவ யத்ரைவ சிரோ மதீயம்
தத்ரைவ தத்ரைவ பதத்வயம் தே ||

—திரிபுரஸுந்தரீ வேதபாத ஸ்தவம்

எங்கெல்லாம் என் மனம் செல்கிறதோ, அங்கெல்லாம் உன்னுடைய திருவுருவமே எனக்குத் தோன்றுகிறது. எந்த எந்த இடமெல்லாம் எனது தலை இருக்கிறதோ, அங்கெல்லாம் உன்னுடைய இரண்டு பாதங்களே இருப்பதாகக் காண்கிறேன்.

புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா
உன்னடி என் மனத்தே
வழுவாதிருக்க வரந்தர
வேண்டும் இவ் வையகத்தே
தொழுவார்க் கிரங்கி இருந்தருள்
செய்பா திரிப்புலியூர்ச்
செழுநீர்ப் புனல்கங்கை செஞ்சடை
மேல்வைத்த தீவண்ணனே.

—திருநாவுக்கரசர்



# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

**ஞாயிறு, செப்டம்பர் 21, 1884**

ஸ்ரீராமகிருஷ்ணர்: பிரகலாதன் பிரேமபக்தியின் உச்சநிலையை அடைந்திருந்தான். ஸ்ரீமதி ராதையிடம் பிரேமைப்பித்து நிறைந்திருந்தது. அது போலவே பக்திப் பித்து என்பதும் உண்டு. இந்த வகையான பக்திப் பித்துக்கு ஸ்ரீ ஆஞ்சநேயர் மிகவும் சிறந்த உதாரணமாவார். சீதை அக்கினிப் பிரவேசம் செய்ய இருந்ததைப் பார்த்த ஆஞ்சநேயர், கோபத்தால் ஸ்ரீராமனையே அடித்துக் கொல்லச் சென்றார். இதைத் தவிர ஞானப் பித்து என்பதும் ஒன்று உண்டு. ஞானப் பித்துக் கொண்ட ஒருவரை நான் முன்பு ஒரு சமயம் பார்த்திருக்கிறேன். அவர் புறத்தளவில் பைத்தியக்காரனைப் போலக் காணப்பட்டார். தட்சிணேசுவரக் காளிகோவில் கட்டி முடிக்கப் பட்டு, அதன் பிரதிஷ்டை நடைபெற்ற சிறிது காலம் கழித்து, அவர் இங்கு வந்தார். ராம் மோகன் ராயினுடைய பிரம்ம சபையைச் சேர்ந்த ஒருவர் என்று மக்கள் அவரைக் கூறினார்கள்.

அவர் பாதத்தில் கிழிந்துபோன செருப்பு அணிந்திருந்தார். ஒரு கையில் கழி ஒன்றைப் பிடித்திருந்தார். மற்றொரு கையில் மாஞ்செடி வைத்திருந்த ஒரு சட்டியை வைத்திருந்தார். ஒரு முழுக்குப் போட்டுக் கங்கையில் நீராடுவதை முடித்துக்கொண்டு காளிதேவியின் சந்நிதிக்குச் சென்றார். அப்போது ஹலதாரி காளிகோவிலில் உட்கார்ந்திருந்தார். காளியின் சந்நிதிக்குச் சென்று அந்தப் பித்தர் மிகுந்த ஆவேசத்துடன் துதிப்பாடல்களைப் பாடினார்.

அவர் காளிதேவியைத் துதித்தார். அவர் பாடிய பாடல்களில் இருந்த உருக்கம் கேட்டவர்களின் உள்ளத்தை வெகுவாக நெகிழச் செய்தது. பின்பு அவர் ஒரு நாயின் அருகில் சென்று, அதன் காதைப் பிடித்துக்கொண்டு, அதனோடு சேர்ந்து எச்சில் உணவைச் சாப்பிட்டார். அந்த நாயும் சத்தமிடவில்லை. அந்த நாளில் எனக்கும் அத்தகைய ஞானப் பித்துப் பிடிக்கும் நிலை உண்டாயிற்று. நான் ஹ்ருதயினுடைய கழுத்தைக் கட்டிக்கொண்டு, ''அடே ஹிருதய், இத்தகைய நிலை எனக்கும் வந்துவிடுமா?'' என்று கேட்டேன்.

எனக்கும் அதுபோன்ற ஞானப்பித்துப் பிடித்த நிலை ஏற்பட்டே விட்டது! நாராயண சாஸ்திரி இங்கு வந்து என்னுடைய அந்த நிலையைப் பார்த்தார். நான் அப்போது என் தோளின்மீது மூங்கிற்கழியை வைத்துக்கொண்டு அங்கு மிங்குமாக அலைந்து திரிந்துகொண்டிருந்தேன். என்னை அந்த நிலையில் பார்த்த அவர், ''ஹா! இவருக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது!'' என்று பலரிடம் கூறினார். அந்த நிலையில் மேல் ஜாதி கீழ்ஜாதி என்று மனிதருக்குரிய சாதிகளெல்லாம் என் உள்ளத்திலிருந்து அகன்று விட்டன. மிகவும் தாழ்ந்த குலத்தைச் சேர்ந்த ஒருவனுடைய மனைவி அந்தக் காலத்தில் கீரைக் கறி சமைத்து எனக்கு அனுப்புவது வழக்கம். தாழ்ந்த குலத்தைச் சேர்ந்த அந்த மாது சமைத்த உணவை நான் தாராளமாக அப்போது உட்கொண்டு வந்தேன்.

தட்சிணேசுவரக் காளிகோவிலில் பிச்சைக்காரர்களுக்கு உணவளித்து வந்தார்கள். பிச்சைக்காரர்கள் சாப்பிட்டு முடிந்ததும் எச்சில் இலைகளை வீசிவிட்டுப் போவார்கள். அந்த எச்சில் இலைகளை எடுத்து நான் என் தலையிலும் வாயிலும் வைத்துக் கொள்ளுவேன். அப்படிச் செய்ததில் தோஷம்

எதுவும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. இதைக் கண்ட ஹலதாரி என்னிடம், ''நீ என்ன காரியம் செய்கிறாய்! எச்சில் உணவைச் சாப்பிட்டிருக்கிறாயே! இனி நீ குழந்தைகுட்டிகளுக்கு எப்படித்தான் திருமணம் செய்துவைக்கப் போகிறாய்?'' * என்று கேட்டார்.

அவர் அப்படிக் கேட்டதும் உடனே எனக்குக் கோபம் வந்துவிட்டது. தூரத்து உறவான ஹலதாரி எனக்கு அண்ணன் முறையாக வேண்டும். வயதில் அவர் என்னைவிட மூத்தவர். இருந்தாலும் என்ன! நான் அவரை நோக்கி, ''அப்படியா, டேய் பயலே! நீ கீதை, வேதாந்தம் எல்லாம் படிக்கிறாயல்லவா? 'பிரம்மமே சத்தியம், ஜகத் மித்யை' என்று நீ மக்களுக்குப் போதிக்கிறாய் அல்லவா? இது போல வேதாந்தவிசாரம் செய்துவிட்டு நானும் குழந்தை குட்டிகளைப் பெற்றுக் கொள்வேன் என்று நீ நினைக்கிறாயா? வேதாந்தத்தையும் உலகப் பற்றையும் ஒன்று படுத்திப் பேசும் உன் கீதை பேசும் வாயில் நெருப்புப் பற்றி எரியட்டும்!'' என்று கோபத்தோடு சுடச் சுடப் பதில் கொடுத்தேன்.

(ம-வைப் பார்த்து): இதோ பார், வெறும் நூலறிவு பெறுவது ஒன்றுக்கும் உதவாது. இசைக்கருவி வாசிப்பதுபற்றி மக்கள் வாயினால் மிக நன்றாகப் பேசலாம்; ஆனால் அதைக் கையில் எடுத்து வாசித்துக் காட்டுவதற்கோ மிகவும் சாமர்த்தியம் இருக்க வேண்டும். அது போல, மிக உயர்ந்த தத்துவங்களைக் குறித்துப் பேசுவது சுலபம். ஆனால் அந்தத் தத்துவங்களை நடைமுறையில் கொண்டு வருவதோ மிகவும் கடினமான விஷயம்.

குருதேவர் மீண்டும் தாம் ஞானப் பித்துக் கொண்டிருந்த நிலையைப்பற்றிச் சொல்ல ஆரம்பித்தார்.

ஒரு சமயம் மதுரநாத்துடன் நான் படகில் சில நாட்களுக்கு யாத்திரையாகப் போயிருந்தேன். அந்த யாத்திரையின்போது ஸ்ரீகிருஷ்ண சைதன்யர் அவதரித்த நவத்வீபத்திற்கும் நாங்கள் சென்றோம். அப்போது படகோட்டிகள் படகிலேயே சமைத்ததைப் பார்த்தேன்.

நான் அவர்களின் அருகில் சென்று அவர்கள் சமைத்ததை நின்று பார்த்துக்கொண்டிருந்தேன். அதைக் கண்ட மதுரபாபு என்னிடம், ''பாபா, அங்கே என்ன செய்கிறீர்கள்?'' என்று வினவினார். நான் புன்னகையுடன், ''படகோட்டிகள் சமைத்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய உணவு நன்றாக இருக்கும் போல் தோன்றுகிறது'' என்று பதில் அளித்தேன். உடனே அவர் என்னை நோக்கி, ''பாபா, அங்கிருந்து திரும்பி வந்துவிடுங்கள், திரும்பி வந்துவிடுங்கள்'' என்று என்னை அழைத்தார்.

ஆனால் இப்போதெல்லாம் அது போல என்னால் செய்ய முடியாது. அந்தக் காலத்திய மனநிலை இப்போது என்னிடம் இல்லை. இப்பொழுதோ நல்லொழுக்கம் கொண்ட ஒருவன்தான் சமைக்க வேண்டும், அந்த உணவும் பகவானுக்கு நைவேத்தியம் செய்யப்பட வேண்டும், அப்படிப் பட்ட பிரசாதத்தை மட்டும்தான் என்னால் சாப்பிட முடியும்.

என்ன என்ன மனநிலைகளிலெல்லாம் நான் அந்த நாளில் இருந்திருக்கிறேன், தெரியுமா! காமார்புகுரில் சினே ச்யாங்காரி முதலிய சம வயதுடைய தோழர்கள் எனக்கு இருந்தார்கள். நான் காமார்புகுரில் இருந்தபோது அவர்களிடம், ''நண்பர்களே! இதோ, உங்கள் காலில் சாஷ்டாங்கமாக வீழ்ந்து நான் வணங்குகிறேன். ஹரிநாமத்தை நீங்கள் சொல்லுங்கள். அது உங்களுக்கு மிகுந்த அளவில் நன்மையைத் தரும்'' என்று சொல்லி வேண்டிக்கொண்டே அவர்கள் கால்களில் சாஷ்டாங்கமாக வீழ்ந்து வணங்கினேன். நான் அவ்விதம் செய்வதைப் பார்த்து சினே ச்யாங்காரி, ''அப்பனே, இப்போது உன்னிடம் தெய்விக அன்பு முதன்முதலாகத் தோன்ற ஆரம்பித்திருக்கிறது. அதனால்தான் நீ மக்களுக்கிடையில் உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்ற வேற்றுமை பாராட்டாமல் அனைவரையும் சரிசமமாகப் பார்க்கிறாய்'' என்று சொன்னான்.

---

* அந்த நாளில் வங்காளத்தில் நிலவிய சமூக வழக்கப்படி பிராம்மணன் ஒருவன் தாழ்ந்த குலத்தைச் சேர்ந்தவரின் எச்சிலை உட்கொண்டால் ஜாதியிலிருந்து விலக்கப்படுவான். அப்படிப்பட்ட ஒரு பிராம்மணனின் புதல்வியரைத் திருமணம் செய்துகொள்ள எவரும் முன்வர மாட்டார்கள்.

புயற்காற்று வீசும்போது குப்பை கூளங்களையும் புழுதியையும் அது கிளப்புகிறது. அப்போது மாமரத்துக்கும் புளியமரத்துக்கும் வித்தியாசம் தெரியாமல் எல்லாம் ஒன்றுபோலவே தென்படு கின்றன. அது போலத்தான் மிகவும் உயர்ந்த ஆன்மிக நிலையிலும் வேறுபாடு எதுவும் தெரிவதில்லை.

ஒரு பக்தர்—குடும்ப வாழ்க்கையில் இருக்கும் ஒருவனுக்கு இந்தப் பக்திப் பித்து அல்லது பிரேமைப் பித்து அல்லது ஞானப் பித்து ஏற் படுமானல் அவன் தனது உலகக் கடமைகளை எப்படி நிறைவேற்றுவான்?

ஸ்ரீராமகிருஷ்ணர்—(அந்த இல்லறப் பக்த ரைப் பார்த்தபடி): யோகிகளுள் வியக்த யோகி (வெளிப்படையான யோகி) என்றும், குப்த யோகி (மறைவான யோகி) என்றும் இரண்டு வகை யானவர் இருக்கிறார்கள். குடும்பத்தில் வாழும் ஒருவன் குப்த யோகியாக இருக்கலாம். அவனை யோகி என்று எவரும் அறிந்துகொள்ளமாட்டார். குடும்ப வாழ்க்கையில் இருக்கும் ஒருவனது விஷயத்தில் அவனது துறவு அகத் துறவாக இருக்க வேண்டும். புறத் துறவு அவனுக்கு இருக்க வேண்டும் என்பதில்லை.

ராம்—தாங்கள் சொல்வது குழந்தைகளுக்கு ஆறுதல் சொல்வது போல அல்லவா இருக்கிறது? குடும்ப வாழ்க்கையில் இருக்கும் ஒருவன் ஞானி யாக வேண்டுமானல் இருக்கலாம்; ஆனல் அவன் ஒருபோதும் விஞ்ஞானியாகமாட்டான்.

ஸ்ரீராமகிருஷ்ணர்—குடும்ப வாழ்க்கையில் இருப்பவனும் நிச்சயமாக விஞ்ஞானியாக ஆகித் தான் தீருவான். குடும்பஸ்தன் ஒருவன் பலவந்த மாகப் புறத் துறவை மேற்கொள்வதனல் அவனுக்கு நன்மை ஏற்படாது.

ராம்—உங்களைப்பற்றிக் கேசவ ஸேன் இவ்விதம் சொன்னர்—''மக்கள் இப்படிப் பெருவாரியாகப் பரமஹம்சரிடம் ஏன் போகவேண்டும்? உலகப் பற்றுடைய மக்கள் ஆன்மிக வாழ்க்கைக்கு உதவ மாட்டார்கள் என்று பரமஹம்சர் என்றாவது ஒரு நாள் அவர்கள்மீது சீறி விழுவார். அப்போது இந்த மக்கள் அவரிடமிருந்து பிரிந்து ஓடிவந்து விடுவார்கள்'' என்று குறிப்பிட்டார்.

ஸ்ரீராமகிருஷ்ணர்—நான் ஏன் அவர்கள்மீது சீறி விழ வேண்டும்? நான் மக்களிடம், ''இதை யும் செய்து பாருங்கள், அதையும் கடைப்பிடி யுங்கள். உலகக் கடமைகளைச் செய்து வாருங்கள். அதே சமயம் பகவானிடமும் அன்பு செலுத்துங் கள்'' என்றுதானே சொல்கிறேன்? உலக மக்கள் எல்லாவற்றையும் துறந்துவிட வேண்டும் என்று நான் வற்புறுத்துவதில்லையே! (புன்னகை ததும்ப) கேசவ ஸேன் ஒரு நாள் சொற்பொழிவு செய்து கொண்டிருந்தார். அப்போது அவர், ''இறைவா, நாங்கள் தெய்வபக்தி என்ற நதியில் மூழ்கி, நேராக ஸச்சிதானந்தக் கடலைச் சென்று அடைய எங்களுக்குத் திருவருள் புரிவாயாக!'' என்று குறிப்பிட்டார். அந்தச் சமயத்தில் பல மாதர் அங்கே திரைக்குப் பின்னல் அமர்ந்திருந்தனர். எனவே அப்போது நான் அங்கிருந்த மாதரைச் சுட்டிக்காட்டிக் கேசவரிடம், ''நீங்கள் எல்லோரும் ஒரேயடியாக அவ்விதம் எப்படி மூழ்க முடியும்? அப்படி நீங்கள் எல்லோரும் ஒரேயடியாக மூழ்கி விட்டீர்களானல் இந்த மாதர்களின் நிலைமைதான் என்ன ஆவது! பக்தி நதியில் மூழ்கியிருந்துவிட்டு, இடையிடையே எழுந்து லௌகிகம் என்ற நிலத்துக்கு வந்து விடுங்கள். மறுபடியும் மூழ்குங்கள். மறுபடியும் எழுந்திருங்கள்'' என்று கூறினேன். இதைக் கேட்டுக் கேசவரும் மற்றவர் களும் சிரிசிரியென்று சிரித்தனர்.

''ரஜோகுணம் கொண்டிருப்பவர்களை நீங்கள் அதிகமாக நேசிக்கிறீர்கள். அதாவது பணக் காரர்கள், புகழ் படைத்தவர்கள், செல்வாக்கு உள்ளவர்கள், நல்ல நிலையில் இருப்பவர்கள், இதுபோன்று இருப்பவர்களிடமே தாங்கள் அதிக மாக அன்பு காட்டுகிறீர்'' என்று ஹாஸ்ரா என் னைப் பார்த்துச் சொல்லுகிறான். அவ்விதம் அவன் சொல்வது உண்மையாக இருந்தால், நான் ஏன் ஹரீசன், நோடோ* போன்றவர்களிடம் அவ்வளவு அதிகமாக அன்பு கொண்டிருக் கிறேன்? நரேந்திரன் மீது எனக்கு ஏன் அவ்வளவு அன்பு இருக்க வேண்டும்? அவன் வீட்டில் தீயில் சுட்ட வாழைக்காய்க்கும் உப்புக்கும் வகை இல்லாமல் அல்லவா உழன்று கொண்டிருக்கிறான்!

❋

* 'நோடோ' என்பது லாட்டுவைக் குறிக் கிறது.

# தமிழகமும் விவேகானந்தரும்

சுவாமி கமலாத்மானந்தர்

நரேந்திரர் பி.ஏ. தேறி வழக்கறிஞர் படிப்புப் படித்துக்கொண்டிருந்தார். அப்போது அவர் தட்சிணேசுவரத்தில் இருந்த ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சரைச் சந்தித்தார்.

பரமஹம்சரின் தவ ஆற்றலும், அன்பு நெஞ்சமும் நரேந்திரரைக் கவரவே, ஸ்ரீராமகிருஷ்ணரைக் குருவாக ஏற்று, ஐம்புலன்களின் தளைகளைத் தகர்த்துப் பெரும் ஆன்மிகப் பயிற்சியை அவரிடம் பெற்ருர்.

'உலகை வெல்லப் பிறந்தவன்' என்று பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரால் பாராட்டப் பெற்றவர் நரேந்திரர். அவர் தமது குருநாதரின் மறைவுக்குப் பின், துறவு பூண்டு இந்தியா முழுவதும், இமயம் முதல் குமரி வரை கால் நடையாகவே பயணம் செய்தார்.

அப்பொழுது விவேகானந்தரின் தமிழக விஜயம், சுவாமிஜியின் வரலாற்றிலும் தமிழக வரலாற்றிலும் பெரும்புகழ் பெற்றுத் திகழ்கிறது.

சுவாமிஜி தமது பாத யாத்திரையை முடித்துக் குமரிமுனையை அடைந்தார். அங்கே குமரி அன்னையை, உலகத் தாயை வழிபட்டார்.

இந்தியரின் நிலையை அவர் கால் நடையாகப் பயணம் செய்தபோது தெளிவாகக் கண்டார். நம் நாட்டவரின் அக்கால இழிநிலை குறித்துப் பெரிதும் வருந்தினர். அவற்றிற்குத் தக்க பரிகாரம் காண அவரது உள்ளம் துடிதுடித்தது.

நீலக்கடலை ஏறிட்டு நோக்கியபோது, அவரது பார்வையில் ஒரு பாறை தென்பட்டது. அலை கடலில் பாய்ந்து சென்று அந்தப் பாறையை அடைந்து சுவாமிஜி அங்கு ஆழ்ந்த தியானத்தில் அமர்ந்துவிட்டார்.

குமரிமுனையில் இருந்தபோது இந்தியாவின் வாழ்க்கைத் தரம் உயர, தாம் பாடுபட வேண்டும் என்ற எண்ணமே அவரது உள்ளத்தில் மேலோங்கியிருந்தது. இந்தியத் தத்துவ ஞானத்தை மேலை நாட்டினருக்கு அளித்து அவர்களிடம் பொருளுதவி பெற்று, இந்த நாட்டு நிலையை உயர்த்த அவர் முடிவு செய்தார். பின்பு புதுவையைக் கடந்து சென்னை வந்தடைந்தார்.

சென்னை, சுவாமிஜியின் வாழ்வில் முக்கிய நிகழ்ச்சிகள் நடைபெற்ற சில நகரங்களுள் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கது. சென்னையில் சுவாமிஜியைக் கண்ணுற்றோர் அவரது திறன் கண்டு வியந்தனர். 1893-ஆம் ஆண்டு அமெரிக்காவைச் சேர்ந்த சிகாகோ நகரில் நடைபெற இருந்த சர்வ சமயப் பேரவைக்கு, இந்து சமயத்தின் சார்பாகக் கலந்துகொள்ளும் எண்ணம் சென்னையில்தான் உருவானது.

அவரது மேலைநாட்டுப் பயணத்திற்குத் தேவையான பொருளுதவி செய்யச் செல்வர்கள் பலர் முன்வந்தனர். ஆனல் சுவாமிஜி அதை மறுத்து, ''எனது பயணத்திற்கான பொருள், நடுத்தர மக்களுடையதாகவே இருக்க

வேண்டும்'' என்று கூறியதால், அவரது பயணத்திற்கான பணத்தை, ஏழை எளியவர்களிடமே வீடு வீடாகச் சென்று சீடர்கள் வசூல் செய்து கொடுத்தனர்.

சுவாமிஜியின் வரலாற்றை எழுதிய பிரெஞ்சு மேதை ரோமேன் ரோலான் என்பவர் குறிப்பிடுகிறர்—''சென்னையில் 1893-ஆம் ஆண்டு ஆரம்பத்தில் சுவாமிஜி தாம் மேல்நாடுகளுக்குத் தூது செல்லப் போவதாகப் பகிரங்கமாய்ப் பிரகடனம் செய்தார். அவரது விருப்பத்திற்கு மாருக அவரது புகழ் முன்னமே எங்கும் பரவி விட்டது. மதிநுட்பத்திற்கும், உயிர்ச்சத்துடன் கூடிய உழைப்புக்கும் பிரசித்தி பெற்ற சென்னை நகரில் அவர் தங்கினர்.

''அங்கு ஏராளமான பார்வையாளர் வந்து அவரை முற்றுகையிட்டனர். தமது பணிக்கென்று வாழ்க்கையை அர்ப்பித்துக்கொண்ட, பக்தி சிரத்தையுள்ள முதல் சீடர் குழாத்தைச் சென்னையில்தான் அவர் தோற்றுவித்தார். அவர்கள் பின்பு அவரை விட்டு அகலவேயில்லை. அவர் புறப்பட்டுச் சென்றபின், கடிதங்கள் மூலமாகத் தமது திடமான நம்பிக்கையை உறுதி செய்துகொண்டு, தொடர்ந்து அவர்கள் அவருக்கு ஆதரவு அளித்தனர். அவரும் தொலைதூரத்திலிருந்து அவர்களுக்கு வேண்டிய கட்டளைகளைப் பிறப்பித்துக்கொண்டிருந்தார். அவரது மகத்தான நாட்டுப்பற்று, சீடர்களின் இதயங்களில் புதிய விழிப்பை ஏற்படுத்தியது. அவர்களின் உற்சாகம் அவருக்குத் திட நம்பிக்கையைப் பல மடங்கு பெருக்கியது.

''சொந்த முக்திக்கான முயற்சிகளுக்கு எதிரிடையாக அவர் பிரசாரம் செய்தார். அதாவது பொதுமக்களின் விமோசனத்தையே இலக்காகக் கொண்டு உழைக்க வேண்டும் என்றார். தாய்நாட்டிற்கு மறுவாழ்வு அளிப்பது, இந்தியாவின் ஆன்மிகச் சக்தியை மீண்டும் மலரச் செய்வது, பிரபஞ்சம் எங்கும் அதன் பெருமையைப் பரப்புவது—இவையே முக்கியமானவை என்றார் விவேகானந்தர்.''

இவ்வாறு பிரெஞ்சு மேதை, விவேகானந்தரின் வரலாற்றில் குறிப்பிட்டுள்ளார்.

சுவாமிஜி 1893-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 11-ஆம் நாள் சிகாகோ நகரில் நடைபெற்ற சர்வ சமய மாநாட்டில் கலந்துகொண்டு, தமக்கே உரிய வேதாந்த முழக்கத்தால் இந்தியப் பண்பாட்டிற்குப் பெருவெற்றியைத் தேடித் தந்தார்.



நான்காண்டுக் காலம் மேலைநாடுகளில் தங்கித் தமது சூறுவளிச் சுற்றுப் பயணத்தின்மூலம் அங்கெல்லாம் வேதாந்தப் பயிரைச் செழிப்பாக வளர்த்தார். அங்கிருந்து சுவாமிஜி எழுதிய கடிதங்கள் பல, தமிழர்களுக்கே எழுதப்பட்டவை. அவர்களில் குறிப்பிடத்தக்கவர் அழகியசிங்கர் என்னும் சென்னை அன்பராவர்.

சுவாமிஜி தம் மேலைநாட்டுப் பயணத்தை முடித்துக்கொண்டு 1897-இல் தாயகம் திரும்ப முடிவு செய்தார். வழியில் கொழும்பு அன்பர்களின் விருப்பத்திற்கிணங்கி, கண்டி, யாழ்ப்பாணம் ஆகிய இடங்களுக்கு விஜயம் செய்தார்.

துறவிவேந்தர் சென்ற இடமெல்லாம் விழாக் கோலம் பூண்டன. சிறப்பான வரவேற்பு சுவாமிஜிக்குத் தரப்பட்டது. அலையெனத் திரண்ட மக்களுக்கு அண்ணல் அருளுரை வழங்கினர்.

கொழும்பிலிருந்து தாயகம் திரும்பிய விவேகானந்தரைத் தமிழகமே முதல்முதலாக வரவேற்கும் பேறு பெற்றது.

---

தீர புருஷர்கள், நீதியறிந்த பெரியோர்கள் திட்டினாலும், புகழ்ந்தாலும், செல்வம் வந்தடைந்தாலும், செல்வம் அழிந்து போனாலும், இன்றே மரணம் வரினும் சரி, அல்லது நீண்ட நாள் கழித்து வருவதானாலும் சரி, நியாய வழியிலிருந்து ஓர் அடிகூட மாறிச் செல்லமாட்டார்கள்.

—நீதி சதகம்

# சங்கரர் ஆற்றிய பணி

வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள்

## உலக வகை

அசையும் பொருள், அசையாப் பொருள் என உலகம் பொதுவாக இரண்டு வகைப்படும். உயிருள்ள பிராணிகள் முதல் வகையிலும், உயிரற்ற வகைகள் இரண்டாம் வகையிலும் சேரும்.

அசையும் பொருள் எனப்படும் முதல் வகையில் ஆறறிவு பெருத பசு, பறவை, ஊர்வன போன்ற பிராணி வகைகளும் ஆறறிவு பெற்ற மற்ற வர்களும் அடங்குவார்கள்.

ஆறறிவு பெற்றவர்களுள்ளும் தேவர், மனிதர் போன்று பல வகை உண்டு. அவர்களுக்கோ மற்றவற்றுக்கோ பெரும்பாலும் அவர்களாலேயே துன்பம் ஏற்படுகிறது. அதற்கும் அவர்களது அறியாமையே முக்கியக் காரணமாகும். அவர்களுள் தத்துவோபதேசத்திற்குத் தகுதியான மனிதர்களின் அந்த அறியாமையை விலக்கவே இந்த மண்ணுலகில் தோன்றி ஆசார்ய சங்கரர் வேதங்களையும் யுக்திகளையும் ஆதாரமாகக் கொண்டு அவர்களுக்குத் தத்துவோபதேசம் செய்தார்.



## எது தத்துவம்?

பேத உணர்ச்சியே அறியாமையாகும். அதுவே எல்லாவிதமான துன்பத்திற்கும் காரண மாகிறது.

உதாமந்தரம் குருதே அத தஸ்ய பயம்
பவதி | த்விதீயாத் வை பயம் பவதி |

'ஜீவேச்வர பேதத்தைச் சிறிதளவும் செய்ப வனுக்குப் பயமே உண்டாகும். நம்மைத் தவிர வேருன இரண்டாவதான பொருளிலிருந்தே பயம் உண்டாகும்' என்பன போன்ற பல உப நிஷத வாக்கியங்கள் இந்தக் கருத்தை வலியுறுத்துகின்றன.

ஆகவே அந்தப் பேத உணர்ச்சி நீங்குவதற்கு, அபேதம் என்னும் தத்துவ உணர்ச்சியே தேவை. அதுவே உண்மைநிலையாகும். அபேத நிலையே உண்மையான தத்துவநிலை என்பதையும்,

ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம—எல்லாம் பிரம்மமே ஆகும்.

ஆத்மைவேதம் ஸர்வம்—இவ்வுலகமெல்லாம் ஆத்ம ஸ்வரூபமானதே.

அயமாத்மா ப்ரஹ்ம- இந்த ஆத்மாவே பிரம்மம்.

சிவமத்வைதம் ஏகமேவாத்விதீயம்—

அத்வைதமே சிவம், வேறு பேதங்களே உண்மையில் கிடையாது என்பன போன்ற பல உபநிஷத வாக்கியங்கள் வலியுறுத்துகின்றன.

அத்வைதம் பரமார்த்தோ ஹி
த்வைதம் தத்பேத உச்யதே |
மாயாமாத்ரமிதம் த்வைதம்
அத்வைதம் பரமார்த்த: ||

பிரபஞ்சம் இருக்குமேயாளுல் அது போய்விடும், சந்தேகமில்லை. இந்தத் துவைதமானது மாயா ஸ்வரூபமே. உண்மையில் அத்வைதமே இருக்கிறது.

---

மனித உடலை ஆபரணங்கள் அழகுபடுத்துவது போல், தெய்வத்தன்மை வாய்ந்த சாதகனை உண்மை, அடக்கம், அன்பு, தயை, காருண்யம் போன்றவை அழகுபடுத்துகின்றன.

—சந்த் ஞானதேவர்

---

'உபதேசாதயம் வாதః, ஜ்ஞாதே த்வைதம் ந வித்யதே-வித்தியாசங்கள் கல்பிக்கப்பட்டிருந்தால் நிவிருத்தியாகிவிடும்' என்ற கௌடபாதர் வாக்கியங்களும் இங்கு நினைவுக்கு உரியன. அந்த உணர்வைப் பெற்று, அத்வைதம் எனப்படும் உண்மையான ஆன்ம நிலையிலே நிலைத்து நிற்பதே சுகம் அல்லது பேரின்ப நிலையாகும். இதை உணராத காரணத்தினாலேயே பலர் பல வழிகளைப் பின்பற்றிப் பல வகையான சொல்லொணாத் துன்பங்களுக்கு ஆளாகிறார்கள்.

### பல கொள்கைகள்

மனிதருள் நாஸ்திகர், ஆஸ்திகர்கள், ஆஸ்திக நாஸ்திகர் என்று பலவகை உண்டு.

1. உடலே ஆன்மா, இந்திரியமே ஆத்மா, பிராணனே ஆத்மா, மனமே ஆத்மா, புத்தியே ஆத்மா; இவற்றைத் தவிர வேறு ஆன்மா என்பது கிடையாது என்ற கொள்கையில் வாழ்க்கையை நடத்துபவர்களே நாஸ்திகர் எனப்படுபவர். இவர்கள் வேதங்களையும் கடவுளையும் மறுபிறவியையும் நம்பாதவர்கள்.

2. உடல், இந்திரியம், பிராணன், மனம், புத்தி இவை யாவற்றினும் வேறானது ஆத்மா; அதுவே வினைசெய்து பயனைப் பெறுவது என்ற கொள்கையில் வாழ்க்கை நடத்துபவர் ஆஸ்திகர் எனப்படுபவர். இவர்களுள்ளும் பல பிரிவுகள் உள்ளன. 'எல்லா உடல்களிலும் ஒரே ஆத்மா தான் உள்ளது' என்று சிலர் கருதுகிறார்கள். 'ஒவ்வோர் உடலிலும் ஒவ்வோர் ஆத்மா' என்று சிலர் கருதுகிறார்கள். 'ஆத்மா அறிவு மயம்' என்று சிலர் கருதுகிறார்கள். 'ஆத்மா அசேதனம்' என்று சிலர் கருதுகிறார்கள். 'இருவிதமானது' என்று சிலர் கருதுகிறார்கள். 'ஆத்மா அணு' என்று சிலர் கருதுகிறார்கள். 'எங்கும் நிறைந்தது' எனச் சிலர் கருதுகிறார்கள் இவர்கள் அனைவரும் வேதங்களையும் கடவுளையும் மறுபிறவியையும் நம்புகிறவர்கள்.

3. இவற்றுள் சிலவற்றை நம்பியும், சில வற்றை நம்பாமலும் இருப்பவர்களே ஆஸ்திக நாஸ்திகர். அவர்களுள்ளும் பல வகையான கொள்கைகள் உள்ளன. பொதுவாக இந்தக் கொள்கைகள் அனைத்தையும் ஆஸ்திக ஷட்தரிசனம், நாஸ்திக ஷட்தரிசனம் என்று முன்னோர் ஒருவாறு வரையறுத்துக் கூறியுள்ளார்கள். அவையெல்லாம் இந்தக் கட்டுரையில் விவரிப்பது தேவையற்றது; ஆகவே விவரிக்கவில்லை. முற் கூறிய இத்தகைய குழப்பங்களுக்கெல்லாம் பேத உணர்ச்சி என்னும் அறியாமை ஒன்றே காரண மாகும் என்பதில் ஐயமிருக்க நியாயமில்லை.

### எது உண்மைத் தரிசனம்?

உண்மைப் பொருளின் அறிவே உண்மைத் தரிசனம் எனப்படும். எங்கும் எப்பொழுதும் யாவருக்கும் ஒரு நிலையிலேயே எந்தப் பொருள் உள்ளதோ அந்தப் பொருள்தான் உண்மை யாகும். அதன் அறிவே உண்மைத் தரிசன மாகும். அப்படி இருக்க, முன்கூறியபடி பல தரிசனங்கள் தோன்றுவதற்கு அறியாமையன்றி வேறு காரணமில்லை. ஆகவே அவற்றுள் ஒன்று தான் உண்மையானதாகும். அதை அறிவதே உண்மைத் தரிசனமாகும். அதுவும்,

> ச்லோகார்தேந ப்ரவக்ஷ்யாமி
> யதுக்தம் சாஸ்த்ரகோடிபி: |
> ப்ரஹ்ம ஸத்யம் ஜகந் மித்யா
> ஜீவோ ப்ரஹ்மைவ நாபர: |

'பிரம்மம் ஒன்றே ஸத்தியமானது. இவ்வுலகம் பொய்யானதே. ஜீவன் பிரம்மமேயன்றி வேறல்ல என்பதே உபநிஷத்துக்களின் கருத் தாகும்' என்றபடி அத்வைத தரிசனமேயன்றி வேறு ஒன்றுமில்லை.



> ஸர்வேஷு ஹி தர்சநேஷு தர்சநீயதமம்
> அத்வைததர்சநமேவ ।

'அத்வைத தர்சனமே ஏனைய தரிசனங் களுக்குள்ளும் சிறந்த தரிசனமாகும்' என்ற வாசஸ்பதிமிச்ரரின் வாக்கியமும்

இங்கே கவனத்திற்கு உரியது. ஆகவே இந்தக் கொள்கையைத்தான் ஆதிசங்கரர் சுருதிகள், ஸ்ம்ருதிகள், இதிகாசங்கள், புராணங்கள் இவற்றின் ஒன்றுபட்ட அபிப்பிராயத்தை எடுத்துக் காட்டுவதன் மூலமாகவும், அதையே நிலைநாட்டும் யுக்திகள் மூலமாகவும் நிலைபெறச் செய்து, முக்தி என்னும் பேரின்பத்தை அடைய வழிவகுத்துக் கொடுத்தார். அந்தக் காரணம் பற்றியே அவர் லோகசங்கரர் ஆனார்.

ச்ருதி ஸ்ம்ருதிபுராணாநாமாலயம் கருணாலயம் |
நமாமி பகவத்பாதசங்கரம் லோகசங்கரம் ||

சுருதி ஸ்ம்ருதி புராணங்களின் இருப்பிடமானவரும், கருணைக் கடலானவரும், உலகத்திற்கு க்ஷேமத்தைக் கொடுப்பவருமான ஸ்ரீசங்கர பகவத்பாதரை நமஸ்கரிக்கிறேன்.

'அநுமார்த்தவிக்ரஹம்-யுக்திகளைத் தமது பாதி சரீரமாகக் கொண்டவர்' என்பன போன்ற வாக்குகளே இந்த உண்மைக்குச் சான்றுகளாகும்.

ஸ்தூலம், சூட்சுமம், காரணம் எனப்படும் மூவகையான சரீரங்களுடன் தொடர்பு கொண்டு, 'ஆன்மா' நான், எனது என்ற முறையில் சம்பந்தப்பட்டு மயங்கியிருக்கும் நிலையே பந்தம் எனப்படும். இதற்கு மாறுபட்டிருக்கும் நிலையே முக்தி எனப்படும்.

ந ஹ வை ஸசரீரஸ்ய ஸத: ப்ரியாப்ரியயோரபஹதிரஸ்தி — சரீரஸம்பந்தமுள்ளவர்களை அது உள்ளவரை ஸுக துக்கங்கள் விடா.

அசரீரம் வாவ ஸந்தம் ந ப்ரியாப்ரியே ஸப்ருசத:—அது இல்லாதவர்களை அவை அணுகா என்பன போன்ற பல உபநிஷத வாக்கியங்கள் மேலே கூறிய கருத்தை உறுதிப்படுத்துகின்றன. ஆகவே, மேலே கூறிய முக்தி நிலையை அடைய வழி வகுத்தவரே ஆதிசங்கர பகவத்பாதர். இந்தக் கருத்தையும் ஒரு மகான் கூறியிருக்கிறார்—

ஸூத்ரப்ரக்ரஹவேதவாஜிநி
மஹந்மீமாம்ஸநஸ்யந்தநே
திஷ்டந் பாஷ்யபிநாக—
முத்தமகுணம் க்ருத்வாத்மதீஸாயகம் |
ஆக்ருஷ்ய ப்ரதஹந்நசேஷ—
விபதாம் மூலம் புராணாம் த்ரயம்
பூயாந்நோபிSநவ: புராரி:
அசுபஸ்யோச்சித்தயே சங்கர: ||

விசாரம் என்ற தேரில் வேதங்களென்னும் குதிரைகளைப் பூட்டி, ஸூத்ரங்களென்னும் கடிவாளத்தின் உதவியுடன், பாஷ்யமென்னும் பிநாகமெனப்படும் வில்லைக் கொண்டு, ஆன்மஞானம் என்னும் அம்பை வேகமாக எய்து, எல்லாத் துன்பங்களுக்கும் காரணமான ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என மூவகைப்பட்ட தேகங்களாகிற முப்புரத்தையும் எரித்த புதிய புராரியான சங்கரர் நமது கஷ்டங்களைப் போக்கட்டும்.

இங்கே 'புராணாம் த்ரயம்' என்பது ஸ்தூல சூட்சும காரண சரீரங்களையே குறிக்கிறது. 'புரமேகாதசத்வாரம்-பதினொரு வாயில் கொண்ட பட்டணம் இந்தச் சரீரம்', 'புரச்சக்ரே த்விபத:— எல்லாத்தேகங்களையும் முதலில் தோற்றுவித்தார்', 'புர: புருஷ ஆவிசத் — அவற்றுள் அவரே பிரவேசித்தார்' என்பன போன்ற உபநிஷத வாக்கியங்களும் சரீரத்தைப் புரம் என்று கூறியுள்ளன.

### பேத நிலை

ஆயினும், 'பிந்நருசிர் ஹி லோக:— உலகத்தின் ருசி பலதிறப்பட்டது' என்றபடி, ஜனங்களின் ஆசை பல வகைப்பட்டதனாலும், 'ஆச்ரமாஸ் த்ரிவிதா ஹீநமத்யமோத்தமக்ருதய:—உத்தமர் மத்தியமர் அதமர் எனச் சீடருள் மூவகை உண்டு' என்றபடி, மக்களின் திறமையும் பலவிதங்களில் இருப்பதனாலும், எல்லோரும் இந்த நிலையை எய்துவது இயலாது என்பதை உணர்ந்தே, இந்த நிலையை எட்டுவதற்கான பல வழிகளும் படிப்படியாக நமது சாஸ்திரங்களில் வகுக்கப்பட்டுள்ளன. ஆனால் அந்த உண்மையை அறியாமல் அவரவர் ஆசையையும் திறனையும் பொறுத்து எவரெவர்

எந்த எந்தப் படிகளைப்பற்றி நிற்கிறார்களோ அந்த அந்தப் படிகளே சிறந்தவை என்றும், மற்றவை தாழ்ந்தவை என்றும் எண்ணி, அறியாமையால் பூசல்களில் இறங்குவார்கள்.

ஸ்வஸித்தாந்தவ்யவஸ்தாஸு
 த்வைதிநோ நிச்சிதா த்ருடம் |
பரஸ்பரம் விருத்யந்தே
 தைரயம் ந விருத்யதே ||

'துவைதிகள் தங்கள் சித்தாந்தத்தில் நிலை கொண்டிருந்தும் தமக்குள் பிளவுபடுகின்றனர்; ஆனால் அத்வைதமதமோ எந்தக் கொள்கைக்கும் விரோதமானதல்ல' என்று கௌடபாதர் கூறியபடி, எம்மதமும் சம்மதமே என்ற கொள்கையையும் அவர்களுக்கு எடுத்துக்காட்டி, அவரவர் தத்தமது படிகளினின்றும் மேற்படிகளுக்குப் போகவும் வழிவகுத்துக் கொடுத்திருக்கிறவரும் ஆதிசங்கரர் ஒருவரேயாவார் என்பதையும் உணர்வது பொருத்தமாகும். 'ஸோபான பஞ்சகம்' என்ற ஒரு நூலையும் ஆதிசங்கரர் அதற்காக இயற்றியிருக்கிறார். அந்த நிலை அவரது அந்திம உபதேசம் என்று பெரியோர் கூறுவர்.



# இதைக் கேள், நண்பனே!

பிரபஞ்சம் முழுவதும் துக்கமயம். சிந்தித்துப் பார். குழந்தைப் பருவத்தில் விளையாட்டுச் சாமான்கள் உன்னைக் கவர்ந்தன; இளமையில் புலனின்பங்களை நாடி ஓடினாய். அறிவற்றவனே! முதுமையில் தன்னந்தனியாக விடப்பட்டிருக்கிறாய். உனக்கு உதவக் கூடியவர் யாருமில்லை.

ஆகவே சிறுவயது முதற்கொண்டு வைராக்கியம் படைத்தவனாக இரு. ஆன்மிக வாழ்க்கையில் ஈடுபாடு கொண்டவனாக இரு. உடம்பின் தேவைகளில் கருத்தைச் செலுத்தாதே. மனங்கசிந்து சொல்கிறேன்—இறைவன் ஒருவனே புகலிடம். இறைவனை நினைப்பது சிரமமா? அவனைக் கருத்தில் கொள்; எல்லா நன்மைகளும் உன்னை வந்தடையும். அல்லும் பகலும் இறைவனிடம் மனம் செலுத்து; பாவங்கள் யாவும் நசித்து அழிகின்றன.

— விஷ்ணு புராணம்

# கங்கை பெருகினால்?

கி. வா. ஜகந்நாதன்

காரைக்கால் அம்மையார் தொடர்ந்து கேள்வி மேல் கேள்வியை எழுப்புகிறார். இறைவனுடைய வாயையும் கண்டத்தையும் நோக்கிக் கேள்வி கேட்ட அவர் இப்போது தம் பார்வையை உயர்த்திப் பார்க்கிறார். சிவபெருமானுடைய சடாபாரத்தில் அவர் பார்வை நிலைக்கிறது.

இறைவன் திருமுடியில் சடை இருக்கிறது. அங்கே அவன் அரவை அணிந்திருக்கிறான்; பிறையைப் புனைந்திருக்கிறான்; கங்கையையும் வைத்திருக்கிறான்.

கங்கை மிக்க ஆரவாரத்தோடும், 'என்னைத் தாங்குவார் யார்?' என்ற மிடுக்கோடும் வந்தது. அதை இறைவன் சடையில் ஏற்றான். அங்கே கங்கை இருக்கிறது. கங்கையில் அலைகள் இருக்கும். அது சடையில் அடங்கி நில்லாமல் மீண்டும் அலைகளை வீசிப் பெருகினால் என்ன ஆகும்?—இப்படி எண்ணிப் பார்க்கிறார் அம்மையார்.

''குழந்தாய், அந்த நாயைப் பிடிக்காதே; அது சாதுவாக இருந்தாலும் திடீரென்று அது உன்னைக் கடித்தாலும் கடிக்கும். அப்போது என்ன செய்வாய்?'' என்று தன் குழந்தையிடம் கூறும் தாயைப் போலச் சொல்கிறார் அம்மையார். இறைவனைத் திருக்கைலையில் சென்று தரிசித்த போது, ''அப்பா!'' என்று கூறிக்கொண்டே அவனை அணுகினார். இப்போதும், ''எம் தந்தையே!'' என்று விளித்து, ''நான் கேட்கும் கேள்விக்கு விடையைச் சொல்'' என்று தொடங்குகிறார்.

கூறு எமக்கு ஈது, எந்தாய்!

கங்கை எப்படி வந்தது? தலையெடுப்பாக அலைகளை வீசிச் சீறிக்கொண்டு வந்தது. 'விண்ணுக்கு அடங்காமல், வெற்புக்கு அடங்காமல், மண்ணுக்கு அடங்காமல் வந்தது.

அது இப்போது பெட்டிப்பாம்பாக இறைவன் சடையில் அடங்கியிருக்கிறது. அங்கே உள்ள பொருள்களை அது இழுத்து அதற்குள்ளேயே அலைவீசிக்கொண்டு நிற்கிறது. ஆற்றின் இயல்பு அது.



சீறி விழித்துப் படரும் ஒளியையுடைய அரவம் கங்கையின் அருகிலே இருக்கிறது. சில சமயங்களில் அலைகளை வீசி அதை இழுத்து ஒலியுடன் ஓடுகிறது. இறைவன் திருமுடி பரந்து விரிந்தது; ஆதலால் அங்கே அதனால் ஓட முடிகிறது. அங்குள்ள பாம்பையும் சந்திரனையும் இழுத்துக் கொண்டு அலைகள் ஒலியை எழுப்ப ஓடுகிறது கங்கை.

சீறி
விழித்துஊரும் வாள்அரவும்
வெண்மதியும் ஈர்த்துத்
தெழித்துஓடும் கங்கைத் திரை.

அவ்வாறு ஓடினாலும் சடையின் எல்லையைக் கடவாமல் இருக்கிறது கங்கை. குண்டுசட்டியில் குதிரையை ஓட்டுவது போல அந்த இடத்தில் தன் ஆற்றலைக் காட்டுகிறது.

சரி, அடங்கிக் கிடக்காமல் சிறைப்பட்டது போல இறைவன் சடையில் இருக்கும்போதும் தன் இயல்பு மாறாமல் அலைகளை வீசி ஓடும் கங்கை

இப்படியே இருக்குமா? கன்னம் போடும் திருடனைச் சிறைக்குள்ளே வைத்தால் அந்தச் சிறையையும் உடைத்துக்கொண்டு வெளியேற முயல்வானே! அது போல இப்போது சடைக் குள்ளே இருக்கும் கங்கை திடீரென்று புரட்சி செய்யப் புகுந்து இறைவனுடைய சடையையும் மீறி மேலே வெள்ளமாகப் பெருகினால் என்ன செய்வது? இறைவன் அப்போது என்ன செய்வான்?

இப்படி ஒரு கற்பனையைச் செய்து இறைவனைக் கேட்கிறார் அம்மையார்.

குளிர்சடையை மீதுஅழித்திட்டு
ஏற மிகப்பெருகின் என்செய்தி?

நான் அன்பு வைத்த குழந்தை வாசலில் விளையாடிக்கொண்டிருக்கும்போது, 'ஏதாவது வண்டி ஏறிவிட்டிருந்தால் என்ன ஆகும்?' என்று எண்ணி அஞ்சுவாள் தாய். குழந்தை எந்த ஆபத்துக்கும் உட்படாத பலமுடையதாக இருந் தாலும் தாயின் மனம் இவ்வாறு எண்ணிச் சஞ்சலம் அடைவது இயல்பு. அம்மையார் அவ்வாறு கற்பனையில் ஒரு விபத்தைக் கண்டு அங்கலாய்க்கிறார்.

கூறுஎமக்கு ஈது, எந்தாய்!
குளிர்சடையை மீதுஅழித்திட்டு
ஏற மிகப்பெருகின்
என்செய்தி?—சீறி
விழித்துஊரும் வாள்அரவும்
வெண்மதியும் ஈர்த்துத்
தெழித்துஓடும் கங்கைத் திரை.

எம் அப்பனே, இந்தக் கேள்வியை விடுக்கும் எமக்கு விடையைச் சொல். சீறிக் கோபத்தோடு விழித்து ஊர்ந்து செல்லும் ஒளியையுடைய பாம்பையும் வெண்மையான பிறையையும் இழுத் துக்கொண்டு ஒலித்து ஓடும் கங்கையில் அலைகள் தாம் தங்கியிருக்கும் நின்னுடைய குளிர்ந்த சடையை மேலே அமிழ்த்திவிட்டு வெள்ளம் ஏறும்படியாக மிகப் பெருகினால் நீ என்ன செய்வாய்?

[எமக்கு என்றது பெருமிதத்தால் வந்த பன்மை. ஈது—இதற்கு உரிய விடையை. இறைவனுடைய சடை கங்கையும் பிறையும் சேர்ந்து தண்மை பெறுமல் இயல்பாகவே குளிர்ந்ததாதலின் குளிர்சடை என்றார். சடையை மீது அழித்துவிட்டு—சடையை மேலே பொங்கி அமுக்கிவிட்டு; அழித்தல்—உரு மறையும்படி பெருகுதல். ஏற—வெள்ளம் உயர. என் செய்தி—அதை மாற்றுவதற்கு என்ன செய்வாய்? வாள்—ஒளி. மதியம்—பிறை. அதில் மறுவின்றி முற்றும் வெண்மையாக இருத்தலின் வெண்மதி என்றார். தெழித்து—ஒலித்து.

ஈர்த்து ஓடும் திரை பெருகின் என் செய்தி என்று முடிக்க.]

'இது பொல்லாத கங்கை. இதை நம்பலாகாது. என்றைக்காவது திடீரென்று பெருகி ஆபத்தை விளைக்கலாம். ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்' என்று சொல்வது போலச் சொல்கிறார்.

அற்புதத் திருவந்தாதியில் வரும் 90-ஆவது பாட்டு இது.



நான் என்றைக்காவது சொர்க்கம் செல்ல நேர்ந்தால், அங்கே மூன்று ஆச்சரியங்களைக் காண்பேன்.

ஒன்று, அங்கே இருக்க மாட்டார்கள் என்று நான் எண்ணும் சிலர் இருப்பார்கள்.

இரண்டு, அங்கே இருப்பார்கள் என்று நான் நம்பும் சிலர் இருக்கமாட்டார்கள்.

மூன்று, போகக்கூடாத நான் அங்கே எப்படிப் போனேன் என்பதுதான்.
—ஜான் நியூட்டன்




# எல்லாம் நன்மைக்கே

த. காவேரி

மூன்பொரு காலத்தில் ஒரு சந்நியாசி வாழ்ந்து வந்தார். அவரது உடைமைப் பொருள்களாவன—1. சமய நூல், 2. மண்ணெண்ணெய் விளக்கு, 3. காலையில் கூவி எழுப்பச் சேவல், 4. பிரயாணத்திற்கு உதவக் கழுதை. இவற்றுடன் சந்நியாசி ஒரு கிராமத்தைச் சென்றடைந்தார். அங்கு இரவு தங்குவதற்கு யாரும் இடம் தரவில்லை.

அந்தச் சாது கடவுள் நம்பிக்கை மிகக் கொண்டவர். தமக்கு நேர்ந்த இந்தத் துன்பமும் தமது நன்மைக்குக் கடவுள் செய்தது எனக் கருதி அருகிலுள்ள காட்டிற்குச் சென்றார். அங்கே ஒரு மரத்தடியில் அமர்ந்துகொண்டார். கழுதையை மரத்தில் கட்டினார். சேவலைப் பக்கத்தில் இருக்கச் செய்தார். பின்பு அன்றாட வழக்கத்தின்படி விளக்கேற்றி, புத்தகத்தைப் படிக்க ஆரம்பித்தார்.

அப்போது பெருங்காற்று விளக்கை அணைத்துவிட்டது. அதைத் திரும்ப ஏற்ற இயலவில்லை. அவர், 'கடவுள் இன்று உணவும் உறைவிடமும் கிட்டாதபடி செய்தார். இப்போது படிப்பதற்கும் தடை செய்திருக்கிறார். இவை யாவும் பகவான் என் மீது கொண்டுள்ள கிருபை காரணமாகச் செய்யப்பட்டவையாகும்' என்று நினைத்துக்கொண்டார்.

சிறிது நேரம் நிச்சப்தமாக இருந்தது. கழுதையின் வாசனையைப் பின்பற்றி வந்த புலி ஒன்று அதை இழுத்துச் சென்றது. ஓர் ஓநாய் சேவலைக் கொன்றது.

காலையில் கூவி எழுப்பச் சேவல் இல்லை. சுமந்து செல்லக் கழுதை இல்லை. எங்கே சென்றாலும் கால் நடையாகவே செல்ல வேண்டும். எனினும் சாதுவிற்குக் கடவுள் நம்பிக்கை எள்ளளவும் குறையவே இல்லை. கருணையுள்ள கடவுள் தமது நன்மைக்கே எல்லாம் செய்வதாக மனப்பூர்வமாக உணர்ந்தார்.

மறுநாள் விடியற்காலையில் சாது பிக்ஷைக்காக அந்தக் கிராமத்திற்குச் சென்றார். கிராமம்முழுவதும் எரிந்து சாம்பலாகக் காட்சி தந்தது. இரவு கொள்ளைக் கூட்டத்தினர் மக்களைக் கொன்று, பொருள்களைச் சூறையாடி, வீடுகளுக்குத் தீ வைத்திருந்தனர். கிராமத்தார் சாதுவை உபசரித்து இரவு தங்க இடம் தந்திருந்தால் அவரும் அழிந்திருப்பார். கானகத்தில் இவரது விளக்கு அணையாமல் இருந்தால், விளக்கொளியில் இவரைக் கண்டு கொள்ளைக்கூட்டத்தினர் இவரையும் கொன்றிருப்பார்கள். இரவில் கழுதை கத்தினாலும், சேவல் கூவினாலும் சாதுவின் உயிருக்கு ஆபத்தே. எனவே இறைவன், விளக்கை அணைத்து, கழுதையையும் சேவலையும் கொன்று, சந்நியாசியின் உயிரைக் காப்பாற்றியுள்ளார். இறைவனது கருணையை எண்ணிச் சாது வியந்தார்.

யாவற்றையும் கண்ட சாது இறையருளில் மேன்மேலும் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டு பெருநிலை அடைந்தார்.

இறைவனது திட்டப்படி எது நேர்ந்தாலும் அது நமது நன்மைக்கே ஆகும். எந்தச் சூழ்நிலையையும் முறையாகப் பயன்படுத்தி இறைவனை அடையும் மார்க்கத்தில் விரைவாக முன்னேற வேண்டும்.

# பரமார்த்தப் பிரசங்கம்

## சுவாமி விரஜானந்தர்

அகண்ட சொரூபியான பகவான் இந்தச் சிறிய, எல்லைக்கு உட்பட்ட, மனித உடலில் எப்படித் தம்மை அவதரிக்கச் செய்ய முடியும்?

இந்தக் கேள்விக்கு, சுவாமி விவேகானந்தர் பின்வருமாறு பதில் கூறியுள்ளார் :—

''ஆம், கடவுள் அகண்ட சொரூபியே என்பது உண்மைதான். ஆனால் நீயாக நினைத்துக் கொண்டிருக்கும் வகையில் அவரது அகண்ட சொரூபம் அமைந்திருக்கவில்லை. 'அகண்டம்' என்பதை நீ உன் ஸ்தூலக் கருத்தின்படி புரிந்துகொள்கிறாய். பிரபஞ்சம் முழுவதும் நிறைந்துள்ள ஒரு பிரம்மாண்டமான, விராட் ஆன, பௌதிகப் பொருள் போன்றது என்று அகண்டத்தைப்பற்றி நீ நினைக்கிறாய். ஆகவே தான் பகவானைப் போன்ற, எல்லையற்று விரிந்து பரந்திருக்கும் ஒரு பொருள், எப்படித் தன்னைச் சுருக்கிக்கொண்டு சின்னஞ்சிறிய மனித உடலில் புகுந்துகொள்ள முடியும் என்று நீ ஆச்சரியப் படுகிறாய். உண்மையில் பகவானது அகண்ட சொரூபம் என்பது, அவருடைய எல்லையற்ற தெய்விகமான ஸத் ஒன்றையே குறிப்பிடுகிறது. ஆகவே பகவான் தம்மை ஒரு மனித உடலில் அவதரித்துக்கொள்ளுவதனால் அந்த ஸத் ஒரு சிறிதும் பாதிக்கப்படுவதில்லை.''

* * *

நிர்க்குணப் பிரம்மம் என்று எது சொல்லப் படுகிறதோ அதுவே சகுணப் பிரம்மமும் ஆகும்.

சகுணப் பிரம்மத்திற்கும் கடவுளின் அவதாரத் திற்கும் வித்தியாசம் எதுவுமில்லை. ஆனால், கடவுளின் அவதாரத்திற்கும் சாதாரண ஒரு ஜீவனுக்கும் வித்தியாசம் இருக்கிறது.

மனிதன் தன் கர்மவினைக்கு உட்பட்டு மீண்டும் மீண்டும் பிறந்தாக வேண்டிய கட்டாய நிலையில் இருக்கிறான். ஆனால், அவதார புருஷரோ எந்த விதக் கட்டாயத்திற்கும் உட்படாமல் தாமாகவே விரும்பி ஒவ்வொரு யுகத்திலும் மனித வடிவம் தரிக்கிறார். அவர் இதைத் தமது தெய்விகச் சங்கற்பத்தினால் சுயேச்சையாகவே செய்கிறார்.

உலகைக் காப்பதற்கும், அதர்மத்தை அழிப்பதற்கும், தர்மத்தை மீண்டும் ஸ்தாபிப் பதற்கும், சாதுக்களுக்கும் பக்தர்களுக்கும் திருவருள் புரிவதற்கும் பகவான் மனிதனாக அவதரிக்கிறார்.

மேலும், ஜீவர்கள் பிரகிருதிக்கு வசப்பட்டுப் பிறக்கிறார்கள். பிரகிருதியோ சத்துவம் ரஜஸ் தமஸ் என்ற முக்குணங்களின் மயமாக விளங்குகிறது.

ஆனால், அவதார புருஷரோ பிரகிருதிக்கு வசப்பட்டவர் அல்ல; முக்குணங்களுக்கு வசப் பட்டவரும் அல்ல. அவர் பிரகிருதியையும் முக்குணங்களையும் அடக்கியாண்டு அவற்றின் யஜமானராக விளங்குகிறார். அவதார புருஷர் சாட்சாத் பகவானே யாவார். அவரது புறத் தோற்றமான மனித உடல் மட்டுமே பிரகிருதி மயமானது.

* * *

மிகவும் உயர்ந்த, மிகவும் உன்னதமான குணநலன்கள் என்று நாம் எவற்றையெல்லாம் கருத இயலுமோ, அத்தகைய குணநலன்கள் அவதார புருஷரிடமே முழு அளவில் இடம் பெற்றிருப்பதைக் காணலாம்.

எல்லாத் தெய்விக குணங்களுக்கும் ஒரு ஸ்தூல வடிவமாகவே (மூர்த்த விக்கிரகம்) அவதார புருஷர் விளங்குகிறார்.

அவதார புருஷர் எடுத்திருக்கும் மனித உடலில் பகவானே பல வகைகளில் லீலை புரிகிறார். ஆனால் அவதார புருஷர் தாம் கடவுள் என்பதையும், தமது தெய்விகத்தையும், தூய மனம் படைத்த சில பக்தர்களுக்கும் மிகவும் நெருங்கிய சில தோழர்களுக்கும் மட்டுமே காட்டியருள்கிறார்; உலகில் தமது சிறப்பு மிக்க அவதாரப் பணியைச் செய்வதற்காகவே அவதார புருஷர் இவ்விதம் செய்கிறார்.

அவதார புருஷர் கடவுளே ஆவார். எனினும் அவர் மனித உடல் தாங்கி வரும்போது புறத்தளவில் ஒரு சாதாரண மனிதனைப் போலவே நடந்துகொள்கிறார். அது காரணமாகப் பொது மக்கள் அவரது உண்மையான தெய்விக இயல்பை உள்ளபடியே புரிந்துகொள்ளத் தவறி விடுகிறார்கள். அது மட்டுமின்றி, அவதார புருஷர் இந்த உலகில் வாழும் சமயத்தில் மக்கள் அவரைச் சிறுமைப்படுத்தி ஏளனமும் செய்கிறார்கள்.

* * *

'சுய முயற்சி, கடவுள் கிருபை ஆகிய இரண்டையும் எப்படிச் சமரசப்படுத்த முடியும்?' என்று கேட்கலாம். இந்த இரண்டும் ஒன்றுக்கு ஒன்று முரண்படுவது போல் தோன்றுகின்றன; ஆனால் உண்மையில் இவற்றுக்கிடையில் முரண்பாடு எதுவும் இல்லை. கடவுளின் கிருபை காரணமாகவே சாதகன் சுயமுயற்சி உள்ளவனாக ஆகிறான். பக்தனிடம் காணப்படும் சுய முயற்சி, அந்தப் பக்தனுக்குக் கடவுள் வழங்கிய நன்கொடையே ஆகும்.

ஆண்மை இல்லாத பக்தர்கள் மிகவும் தாழ்ந்த வகையைச் சேர்ந்தவர்கள்.

மகாவீரரான அனுமான், அர்ஜுனன், பிரகலாதன் ஆகியோர் எத்தகைய் வீரமும் தீரமும் மிக்க பக்தர்களாகத் திகழ்ந்தார்கள் என்பதைச் சிந்தித்துப் பார்!

ஸ்ரீ ஆஞ்சநேயர் கடலைக் கடக்க நேர்ந்தபோதும் கூட அச்சம் கொள்ளவே இல்லை. 'ஜயராம்!' என்ற கோஷத்துடன் அவர் ஒரே தாண்டுதலில் கடலைக் கடந்துவிட்டார். பிரகலாதன் மீண்டும் மீண்டும் மரணத்தைச் சந்திக்க நேர்ந்தபோதும் கூடச் சிறிதும் நடுங்கவே இல்லை. விஷ்ணுவிடம் மனதை ஐக்கியப்படுத்திக்கொண்டு விஷ்ணுவிடம் சரண் புகுந்தான். அதன் பயனாக மகா விஷ்ணுவே தோன்றிப் பிரகலாதனைக் காத்தார். அர்ஜுனனின் வீரத்தைப் பற்றியோ எல்லோருக்குமே தெரியும். புராணங்களில் இவர்களைப் போன்ற மிகச் சிறந்த உதாரண புருஷர்கள் நூற்றுக் கணக்கிலே இருக்கிறார்கள். ●

# செய்திகள்

* மயிலாப்பூர், பாரதீய வித்யா பவன் ஏப்ரல் 28-ஆம் நாள் மாலை 6-45க்கு ஸ்ரீசங்கர-ராமானுஜ ஜயந்தியைக் கொண்டாடியது. சுவாமி கமலாத்மானந்தர் 'ஸ்ரீராமானுஜரின் வாழ்வும் வாக்கும்' குறித்து உரையாற்றினார்.

* எழும்பூர், சிந்து சதனில் விஸ்வ ஹிந்து பரிஷத் சார்பாக 1-5-82 மாலை 6-30க்கு 'கன்னியா குமரி தினம்' பொதுக்கூட்டம் நடைபெற்றது. சுவாமி கமலாத்மானந்தர் ஹிந்துக்களிடையே ஒற்றுமை ஏற்பட வேண்டிய அவசியத்தை வலியுறுத்திப் பேசினார்.

* சுண்டாக்காமுத்தூர், சுவாமி விவேகானந்தர் சங்கத்தின் 41-ஆவது ஆண்டு விழா மே 2-ஆம் நாள் விமரிசையாகக் கொண்டாடப் பெற்றது. சுவாமி சோமானந்தர் தலைமையுரை வழங்கினார்.

# சைதன்யரின் சித்தாந்தம்

ஆத்திரேய சுந்தரநாராயணன்

''பக்திமார்க்கமே பகவானை அடையும் வழிகளில் சிறந்தது; ஏனெனில் அது சாதன மாகவும் அதன் பலனுகவும் உள்ளது'' என்று நாரதர் பக்தி சூத்திரத்தில் கூறுகிருர்.

''பக்திமார்க்கத்தை உபதேசித்த ஆசிரியர் களில் சிறந்தவர் சைதன்யர். இந்து, முஸ்லிம், பாவி, பரிசுத்தமானவன், தாழ்த்தப்பட்டவன் எல்லோருக்கும் அவரது பக்திவெள்ளம் ஆறுதல் அளித்தது'' என்கிருர் சுவாமி விவேகானந்தர்.

சைதன்யர் கி.பி. 1486-லிருந்து 1534 வரையில் வங்காளத்திலும் புரியிலும் வாழ்ந்து, இந்தியா முழுவதும் கால்நடையாகச் சென்று, தமது பக்தி மார்க்கத்தை உபதேசித்து, மக்களை நாம சங்கீர்த்தனத்தில் ஈடுபடச் செய்தார்.

சைதன்யரின் சித்தாந்தம் 'அசிந்த்ய பேதா பேதம்' எனப்படுகிறது. ஜீவாத்மா, பரமாத்மா, பிரபஞ்சம் ஆகிய மூன்றும் தனித்தனித் தத்துவங்கள் ; தத்துவ த்ரயங்கள். ஜீவாத்மா விற்கும் பரமாத்மாவிற்கும் ஸத் (இருப்பு, அழியாத்தன்மை), சித் (ஞானம்), ஆனந்தம் உண்டு. இந்த இயல்புகளில் ஒற்றுமை (அபேதம்) காணப்படும். ஆனல் ஜீவாத்மாவிற்கு ஞானமும் ஆனந்தமும் அளவில் அல்பம். இதுதான் வேறுபாடு (பேதம்).

பகவானின் ஜீவசக்தி ஜீவர்களையும், மாயாசக்தி பிரபஞ்சத்தையும் உண்டாக்கின. இந்தச் சக்தி களைப்பற்றி நாம் முழுமையாகச் சிந்தித்து அறிய முடியாது. ஆகையால் நமக்கும் இறை வனுக்குமிடையில் அசிந்த்ய பேதாபேதம் உள்ளது.

வாதங்களில் மூன்று வகை உண்டு—
1. ஆரம்ப வாதம் — நியாய வைசேஷிகர் கொள்கை. இதன்படி, கல்ப ஆரம்பத்தில் ஜடப் பொருள்கள் அணுக்களிலிருந்து பகவானின் சங்கல்பத்தால் உண்டாகிப் பின் அழிகின்றன.

2. பரிணும வாதம் — சக்திபரிணுமப்படி, கடவுளின் சக்திகளே ஜீவர்களாயும் பிரபஞ்சமாயும் ஆயின. சூரியனிடமிருந்து கதிர்கள் வருவது போலவும், நெருப்பினின்று தீப் பொறிகள் வருவது போலவும் (முண். உப. 2—1—1) ஜீவாத்மாக்கள் இறைவனிடமிருந்து வந்தன. பிரம்ம பரிணுமப்படி, பிரம்மமே ஜீவர்களாகவும் பிரபஞ்சமாகவும் ஆயிற்று.



சாங்கியத்தின்படி, மஹத், அகங்காரம், மனம் பஞ்சபூதங்கள், மொழிகள், புலன்கள், கர்மேந்திரி யங்கள் இவற்ருல் ஜீவர்களின் உடலும், பிர பஞ்சமும் உண்டாயின.

3. விவர்த்த வாதத்தின்படி, பிரம்மமே நித்யம்; பிரபஞ்சம் அநித்யம்; கானல்நீர் போன்றது. ஜீவர்கள் பிரம்மத்தின் பிம்பங்களே என்று கருதுவது.

சைதன்யரின் சித்தாந்தம் சக்திபரிணுமம் ஆகும்.

சைதன்யர் தமது சக்திபரிணும வாதத்திற்கு, பாகவதத்தையும்(11—11—31), பிரம்மசம்ஹிதை யையும் (6—8) ஆதாரங்களாகக் கூறுகிருர்.

சைதன்யரின் சித்தாந்தப்படி, நாராயணனே உயர்ந்த பரப்பிரம்மம். அவன் எல்லாப் பொருள் களிலும் ஊடுருவி அணுப்போன்றும், ஆகாயத்தில்

வியாபித்து விபுவாகவும் இருப்பவன்; சகல கல்யாண குணங்களையும் பெற்றவன்; ஞானம் வீர்யம் பலம் சக்தி ஐசுவரியம் தேஜஸ் என்ற ஆறு குணங்களை அவன் பெற்றிருப்பதனல் பகவான் எனப் பெறுகிருன்; மேலும் சத்தியகாம சத்தியசங்கல்ப சக்திகளையும் பெற்று, கம்பீரமாக உள்ளவன். எல்லாப் பொருள்களிலும் ஊடுருவி அந்தர்யாமியாக இருப்பதனலும், எல்லாப் பொருள்களும் அவனிடத்தில் இருப்பதனலும் அவனுக்கு நாராயணன் எனப் பெயர். பகவானுக்கு நிர்க்குணம் என்பது நிர்மலமாய் இருப்பதே.

கிருஷ்ணன் ஸௌலப்யம் (பக்தர்களுக்கு எளியவனதல்), ஸௌசீல்யம் (தாழ்ந்தவருடன் சமமாகக் கலத்தல்), வாத்ஸல்யம், காருண்யம், மன்னித்தல், உதாரகுணம், பக்தர் துயரைப் போக்குதல் முதலிய கல்யாண குணங்கள் பெற்றிருப்பதனல் கிருஷ்ணனையே இவர் வழி படும் கடவுளாகக் கொண்டார்.

மேலும் ''சாந்தம், தாஸ்யம், ஸக்யம் (நட்பு), வாத்ஸல்யம் (தாய்க்குக் குழந்தையிடமுள்ள அன்பு), மாதுரியம் (நாயகி நாயகன் மீது கொள்ளும் அன்பு) என்று ஐந்து வகையாகப் பக்தி செலுத்தும் பாவனைகளில் கிருஷ்ணனிடம் எல்லா ரஸங்களையும் காட்டலாம். ஆனல் நாராயணனிடம் முதல் இரண்டு ரஸங்களையே காட்டலாம்'' என்கிருர் சைதன்யர்.

''ஜீவாத்மா அணுப் போன்றது. அது கர்ம சம்பந்தத்தால் பிறப்பு இறப்பைப் பெறுகிறது. படிப்படியாக சிரத்தை (நம்பிக்கை), சாது சங்கம், பஜனை கேட்டல், பாடல், கோபம் பொருமை முதலிய தடைகளை நீக்கல், கிருஷ்ணனனிடம் அன்பு, நாமம் கேட்க ருசி, தீவிர பக்தி, ஐந்து பாவனைகள் இவற்ருல் இறுதியில் ராதாவின் பிரேமை என்ற பரமபக்தியால் முக்திபெற்று, ஸித்தவடிவில் கிருஷ்ணனுக்கு ஜீவாத்மா சேவை செய்து ஆனந்தம் பெறுகிருன்'' என்று சைதன்யர் கூறுகிருர்.

'தத் த்வம் அஸி' என்பதற்கு, 'நீ பிரம்மத்தினுடையவன் ஆகிருய்' என்று அவர் பொருள் கூறுகிருர்.

சிரவணம் (பாகவதம் கேட்டல்), கீர்த்தனம், ஸ்மரணம் (சிந்தித்தல்), பாதஸேவனம், அர்ச்சனம், வந்தனம், தாஸ்யம், ஸக்யம் (நட்பு), ஆத்மநிவேதனம் (சரணுகதி) என்று பாகவதத்தில் (7—5—23) பிரஹ்லாதன் கூறிய ஒன்பது உபாயங்களையும் பக்திக்குச் சாதனங்களாகக் கொள்ளலாம் என்ருலும், அவற்றில் நாம சங்கீர்த்தனமே சிறந்தது என்பது சைதன்யரின் கொள்கை.

சைதன்யர், வைணவருக்கு உணவில் சில நியமங்களை ஏற்படுத்தினர். ''ஊன், காபி, தேயிலை, புகையிலை, வெங்காயம், உள்ளிப் பூண்டு, சாராயம் இவற்றைச் சேர்க்கக் கூடாது'' என்ருர். அவரது பஜனைக் கோஷ்டியில் பெண்களைச் சேர்க்கவில்லை; நல்லொழுக்கத்தை அவர் வற்புறுத்தினர்.

''நாயகி நாயக பாவம் என்ற ராதையின் மதுர பாவனைப் பிரேமையைக் கடைப்பிடிப்பது, நிர்மல மனமும் வீரமும் பெற்ற துறவிகளால்தான் இயலும். சாதாரண மக்கள் இந்த முறையை, பக்தி பெற அனுஷ்டித்தால் காமவேட்கையில் ஆழ்த்திவிடும். ஆடிப் பாடிப் பரவசநிலை அடைவதில் ஓஜஸ்சக்தி விரைவாகக் குண்டலியினின்று மேலே ஏறி, பிறகு திடீரென்று கீழே இறங்கி விடும். ஆதலால் தியானமும் விவேகமும் ஞானமும் அவசியம். மதுரபாவனை தவிர மற்றப்பாவனைகளை, பக்திபெற அனுஷ்டிக்கலாம். அழுது அரற்றினல் மக்கள் பயந்த கோழைகளாக ஆகிவிட வாய்ப்பு உண்டு. அது நாட்டுக்கு ஆபத்து'' என்கிருர் சுவாமி விவேகானந்தர்.

தென்னுட்டு ஆழ்வார்களும் மதுரபாவனையை அனுஷ்டித்துப் பாசுரங்கள் இயற்றியுள்ளனர். ''பித்தனய் ஒழிந்தேன் எம்பிரானுக்கே'' என்கிருர் குலசேகராழ்வார். ''கடவுளைக் காண விரும்புகிருயா? கடவுளிடம் பிரேமைப் பைத்தியம் பிடித்த ஒருவனைத் தேடு. அவனிடம் கடவுளைக் காண்பாய்'' என்ருர் பகவான் ஸ்ரீராம கிருஷ்ணர்.

---

வினைகளின் நற்பயனையோ தீய பயனையோ, மறுபிறப்பில் நமது முயற்சி எதுவுமில்லாமலே விதி நம்மிடம் கொண்டுவந்து சேர்ப்பிக்கிறது.
—பஞ்சதந்திரம்

# அருள்நெறிக் கதை

## பழி நீங்கியது!

ராஜம் ஜயராமன்

அனந்தகுணன் என்ற அரசன் பாண்டிய நாட்டை ஆண்டு வந்தான். அவன் நீதி தவருமல் அரசு செலுத்தினன். ஆகவே அவனது ஆட்சியில் மக்கள் மிகவும் நிம்மதியாக வாழ்ந்தார்கள்.

ஒரு சமயம் ஓர் அந்தணன் தன் மனைவியையும் குழந்தையையும் அழைத்துக்கொண்டு, மதுரையில் இருக்கும் தன் உறவினர் வீட்டிற்குச் சென்றுகொண்டிருந்தான்.

அப்போது அவன் வழியில் இளைப்பாறுவதற்காகக் காட்டிலுள்ள ஓர் ஆலமரத்தடியில் தங்கினன். பிறகு அவன் தண்ணீர் கொண்டு வருவதற்காக, மனைவியையும் குழந்தையையும் மரநிழலில் விட்டு, நீர்நிலை இருக்கும் இடத்தைத் தேடிச் சென்றன்.



களைப்பு மிகுதியால் அந்தணனின் மனைவி தன் குழந்தையுடன் அங்கேயே அயர்ந்து தூங்கி விட்டாள். அந்தச் சமயத்தில், மரத்தின் மீது ஏற்கனவே சிக்கியிருந்த ஓர் அம்பு, காற்றின் அசைவால் அவள்மீது விழுந்தது. எவரோ எப்போதோ எய்த அந்த அம்பு இன்று அவள் உயிரைக் குடிக்கக் காரணமாயிற்று. வயிற்றில் அம்பு பட்டதனல் அந்தப் பெண் அந்த இடத்திலேயே உயிர் நீத்தாள்.

அதே சமயத்தில் கையில் வில்லும் அம்பும் ஏந்திய வேடன் அங்கே வந்தான். அவன் மரத்தடியில் வேருெரு புறமாக இளைப்பாறுவதற்காக வந்து ஒதுங்கினன். அந்த வேடனுக்கு அங்கே நிகழ்ந்தது எதுவும் தெரியாது.

தண்ணீருடன் திரும்பிய அந்தணன் இரத்த வெள்ளத்தில் மனைவியைக் கண்டு அதிர்ச்சியடைந்தான். தன் ஆருயிர் மனைவி அம்பு பட்டு இறந்து கிடப்பதையும், அருகில் குழந்தை அழுவதையும் கண்டு மிகவும் பரபரப்படைந்தான். துக்கம் உள்ளத்தை அழுத்த, யார் இந்தப் பாதகச் செயலைச் செய்திருக்க முடியும் என்று சுற்றுமுற்றும் பார்த்தான். சற்றுத் தூரத்தில் வேடன் இருப்பது அவன் பார்வையில் தட்டுப்பட்டது. நிகழ்ந்தது எதையும் அறியாத நிலையில் ஒரு மூலையில் வேடன் இருந்தான்.

கையில் அம்பும், இடையில் கட்டிய கச்சும், கொலைகாரனைப் போன்ற தோற்றமும் கொண்ட வேடனை அந்தணன் கண்டான். அவனுக்கு, தன் மனைவியை இந்த வேடனே கொன்றிருப்பான் என்று தோன்றியது. ஆகவே வேடனிடம் சென்று மிகுந்த உள்ளக் கொதிப்புடன் அவனைப் பலவாறு அந்தணன் தூற்றினன். ''என் அருமை மனைவியைக் கொன்றவன் நீயே. பாண்டியன் மீது ஆணை! நீ என்னேடு மன்னனிடம் வந்தாக வேண்டும்'' என்று கூறி அழைத்தான்.

வேடன்மீது தவறு இல்லை. அவன் ஒன்றும் புரியாமல் விழித்தான். எனினும், 'பாண்டியன் மீது ஆணை!' என்று அந்தணன் சொல்லி விட்டதனால், வேடன் அந்தணனோடு செல்ல ஒப்புக்கொண்டான்.

இறந்துபோன மனைவியைத் தோளிலே சுமந்து கொண்டும், குழந்தையை இடுப்பில் அணைத்துக் கொண்டும், வேடனை அழைத்துக்கொண்டு அந்தணன் பாண்டிய மன்னன் அவையில் புகுந்தான்.

அந்தணன் அரசவையில் தன் மனைவியின் உடலைக் கிடத்தினான். பிறகு அவன் வேடனை முன்னே நிறுத்தி அரசனைப் பார்த்து, ''மன்னவா! புகழ்மிக்க செங்கோலனே! எப் போதும் பகையை வென்று வெற்றி பெறுபவனே! உனது நாட்டில், நீ உறங்கினாலும் உன் ஆணை உலகெங்கும் அறம் வழுவாமல் காக்கும் என்று சொல்வார்களே! அத்தகைய ஆணை இந்தக் கொடியவன் செய்த கொலையை ஏன் தடுக்க வில்லை?'' என்று கூறி அழுது முறையிட்டான்.

வேடன் புலம்பியதைக் கேட்டு வேந்தன் மெய்சிலிர்த்தான்; உள்ளம் நடுங்கினான். ''என் ஆட்சியில் இப்படி ஒரு நிகழ்ச்சியா? குடி மக்களுக்கு ஐவகையான அச்சத்தையும் (அரசன், அவனது ஆட்கள், விலங்கு, பகைவர், கள்வர் என்ற ஐந்து வகையிலும் துன்பம் ஏற்படாமல் காப்பது ஐவகை அறம் எனப்படும்) நீக்கி அறத்தை நான் செவ்வனே காத்து வருகிறேன். இந்தக் கொலை எப்படி நிகழ்ந்தது?'' என்று மிகவும் பதற்றத்துடன் அந்தணனைப் பார்த்துக் கேட்டான்.

''என் மனைவியை ஓர் ஆலமர நிழலில் தங்கச் செய்து நான் தண்ணீர் கொண்டுவரச் சென் றேன். திரும்பி வந்து பார்த்தபோது அம்பு தைத்து என் மனைவி இறந்து கிடந்தாள். அருகில் இந்த வேடன் மட்டுமே இருந்தான்'' என்று அந்தணன் முறையிட்டான்.

பாண்டிய மன்னன் வேடனைப் பார்த்து, ''என்ன நிகழ்ந்தது? சொல்'' என்று வினவி னான். வேடனோ நடுநடுங்கியபடி, ''மன்னர் பெருமானே! எனக்கு எதுவும் தெரியாது. நான் இளைப்பாறுவதற்காக அந்த மரத்தடிக்குச் சென்றேன். நான் இந்தக் கொலையை செய்யவு மில்லை; கொன்றவனையும் பார்க்கவில்லை'' என்று பயத்துடன் பதில் அளித்தான்.

மன்னனின் அவையில் கூடியிருந்தவர்களுக்கு வேடனின் பேச்சில் நம்பிக்கை ஏற்படவில்லை. ஆகவே அவர்கள் அவனை நோக்கி, ''அப்படி யானால் இவள் உடம்பில் எப்படி அம்பு தைத்தது?'' என்று கேட்டனர்.

அதற்கு வேடன், ''அரசே! உண்மையில் எனக்கு இதைப்பற்றி ஒன்றுமே தெரியாது. நான் நடந்த உண்மையை அறியேன்'' என்று கூறி அழுதான்.

அமைச்சர்கள், ''இந்த வேடன் பொய் சொல்கிறான். இவனைக் கடுமையாகத் தண்டித் தால்தான் உண்மை வெளியே வரும்'' என்றார்கள்.



அரசனும் அவ்விதமே வேடனைத் தண்டிக்கும் படி கட்டளையிட்டான்.

வீரர்கள் வேடனைச் சூழ்ந்தனர். அவனைக் கைது செய்து இழுத்துச் சென்று பல விதங்களில் தண்டனை கொடுத்தனர். ஆனால் குற்றமற்ற வேடனோ, ''எனக்கு ஒன்றும் தெரியாது'' என்று தான் சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்லிக்கொண்டிருந்தான்.

இதனைக் கேள்வியுற்று மன்னன் வெகுண்டான். தனது அமைச்சர்களிடம் அவன், ''இன்னும் நன்றாக ஆராய்ந்து பாருங்கள். இந்தப் பெண்ணைக் கொல்வதனால் வேடனுக்கு என்ன லாபம் ஏற்படும்? இவன் வேட்டையாடுவதற்கு அந்தப் பெண் என்ன, பறவையா? இல்லை,

விலங்கா? ஒருவேளை வேடன் விலங்கை வேட்டையாடக் குறிவைத்து, அந்த இலக்குத் தவறி இவள்மீது அம்பு பட்டதா என ஆராய்ந்து பாருங்கள்'' என்று கட்டளையிட்டான்.

அமைச்சர்கள் உண்மையைக் கண்டறியப் பல விதங்களில் முயன்றனர். எனினும் அவர்களின் முயற்சி உரிய பலன் தரவில்லை ''நிகழ்ந்ததற்கு என்ன காரணம் என்பதை எங்களால் கண்டறிய இயலவில்லை. இதுபற்றித் தெய்வமே அறியும்'' என்று அவர்கள் மன்னரிடம் தெரிவித்தார்கள்.

அரசன், மனைவியை இழந்த அந்தணனுக்கு, ''கவலை வேண்டாம். நான் தீர விசாரணை செய்து தக்க நீதி வழங்குவேன்'' என்று பலவாறு ஆறுதல் கூறினான்.

''நீதி விசாரணை முடியும் வரையிலும் வேடனைக் காவலில் வைத்திருங்கள்'' என்று மன்னன் தன் வீரர்களுக்குக் கட்டளை பிறப் பித்தான்.



பிறகு அனந்தகுண பாண்டியன் தனது குல தெய்வமான சோமசுந்தரப் பெருமான் திருமுன் சென்று பணிந்து, ''சிவபெருமானே, இந்தக் கொலையை வேடன்தான் செய்தானா? அல்லது வேறு யாராவது செய்தார்களா? என்ன காரணத்தினால் அந்தணனின் மனைவி கொலை செய்யப்பட்டாள்? அறநூல்களாலும் உண் மையை அறிய முடியாமல் திகைக்கிறேன். உண்மைக் குற்றவாளியைக் கண்டுபிடிக்கும் விஷயத்தில் தாங்கள்தாம் துணைசெய்ய வேண்டும். திருவருள் புரியுங்கள்'' என்று முறையிட்டான்.

சிவபெருமானின் திருவருளால் வானில் ஓர் அசரீரி ஒலித்தது. ''இந்த நகரத்தில் ஒரு திருமணம் நடைபெற இருக்கிறது. திருமண வீட்டிற்கு அந்தணனோடு நீயும் செல்வாயாக. அங்கே உங்களுக்குத் தெளிவு உண்டாகும்'' என்று அசரீரி ஒலித்தது.

அசரீரியாக ஒலித்த இறைவனின் திருவாக்கு மன்னன் காதில் விழுந்தது.

அன்றைய இரவே பாண்டிய மன்னன் மாறு வேடம் புனைந்து, அந்தணனையும் உடன் அழைத்துக்கொண்டு அசரீரி குறிப்பிட்ட திருமண வீட்டிற்குச் சென்றான்.

திருமண வீடு கோலாகலமாக விளங்கியது. அங்கு இறைவன் அருளால், மன்னனுக்கும் அந்தணனுக்கும் மட்டுமே தெரியும் வகையில் ஒரு நிகழ்ச்சி நடந்தது.

கரிய உருவம் கொண்ட இருவர் தங்களுக்குள் பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் கையில் பாசக்கயிறு இருந்தது. கூற்றுவனின் தூதர்களே அவர்கள் என்பதை மன்னனும் அந்தணனும் உணர்ந்துகொண்டனர்.

இருவரில் ஒருவன், ''இதோ மணமகன் இங்கே இருக்கிறான். இவனுடைய உயிரைக் கொண்டுவரும்படி நம் தலைவர் நமக்குக் கட்டளை யிட்டிருக்கிறார். இவன் உடலிலோ நோய் எதுவும் இல்லை. அப்படி இருக்கும்போது இவன் உயிரை நாம் எப்படிப் பற்றுவது? காரணமின்றி உயிர்கொள்வது முடியாதே!'' என்றான்.

அதற்கு மற்றவன், ''அந்தணனின் மனைவி உயிரை நாம் எப்படிப் பறித்தோம் என்பது உனக்கு நினைவு இல்லையா? வேடன் எப்போதோ எய்த அம்பு ஆலமரத்தில் சிக்கியிருந்தது. அந்த அம்பைக் காற்றிலே அசையச் செய்து ஆலமர நிழலில் தங்கிய அந்தணனின் மனைவிமீது விழச் செய்தோம். அது காரணமாக அவளை உயிர் இழக்கச் செய்து அவள் உயிரைக் கவர்ந்தோம். அதுபோலவே ஏதாவது ஒரு புறக் காரணத்தை உண்டுபண்ணி இந்த மணமகனின் உயிரையும் இப்போது பறித்துவிடுவோம். அதோ பார். திருமண வீட்டுக்கு வெளியே ஓரமாக ஒரு பசு நின்றுகொண்டிருக்கிறது. அந்தப் பசுவை ஆவேசம் கொள்ளச்செய்து மிரண்டு ஓடும்படி செய்துவிடுவோம். அது பாய்ந்து சென்று

மணமகனைக் குத்தட்டும். அதை ஒரு காரண மாகக் கொண்டு அவனது உயிரை நாம் பறித்து விடலாம்'' என்று பதில் கூறினன்.

இவ்விதம் கூற்றுவனின் இரு தூதுவர்களும் பேசிக்கொண்டதை அரசனும் அந்தணனும் கேட்டனர்.

'இப்போது உண்மை புரிந்ததா?' என்று கேட்பது போல அரசன் அந்தணனின் முகத்தை ஏறிட்டு நோக்கினன்.

அதற்குப் பதிலாக அந்தணன், ''இவர்கள் சொல்வது போல மணமகன் மாடு குத்தி இறந்து போனல், இதுபோலத்தான் என் மனேவியும் இறந்துபோனள் என்று மனக்கவலே விடுவேன். ஆகவே மேற்கொண்டு என்ன நடக்கிறது என்று பார்க்கலாம்'' என்ருன்.

அரசனும் அந்தணனும் நடப்பதை எதிர் நோக்கி இருந்தனர்.

திருமண வீட்டில் மக்கள் கூட்டம் நிரம்பி வழிந்தது. திருமணம் நேரம் நெருங்கியது. மங்கல ஒலி எழுந்தது. வேகமாக ஒலித்த வாத்திய இசையைக் கேட்ட பசு வெருண்டு, கட்டியிருந்த கயிற்றை அறுத்துக்கொண்டு அங்கும் இங்கும் ஓடியது. அதைக் கண்டு மக்கள் கூட்டம் பீதி காரணமாக நிலேகுலேந்து சிதறியது. மிரண்டிருந்த பசு பாய்ந்தோடிச் சென்று மணமகனே முட்டித் தள்ளியது. அது காரணமாக மறு விநாடியே மணமகன் அந்த இடத்திலேயே உயிர் துறந்தான்.

இந்த நிகழ்ச்சியை அரசனும் அந்தணனும் கண்டனர். மனத் தெளிவுடன் அரசவைக்குச் சென்று நடந்தவற்றை அமைச்சர்களுக்கெல்லாம் எடுத்து கூறினர்.

பிறகு அரசன், அந்தணனுக்கு வேருெரு பெண்ணேத் திருமணம் செய்து கொடுத்தான்.

சிறையில் வைத்திருந்த வேடனேயும் விடுவித்து ''உண்மையை உணராமல் தங்களேச் சிறையில் வைத்ததற்கு என்னே மன்னியுங்கள்'' என்று மன்னன் மன்னிப்புக் கேட்டுக்கொண்டதோடு, வேடனுக்குப் பல செல்வங்களேயும் வழங்கி வழியனுப்பி வைத்தான்.

பிறகு அரசன் சோமசுந்தரக் கடவுளிடம் சென்று, ''தங்கள் கருணேயால் அரும் பழி நீங்கியது, தர்மம் தழைத்தது'' என்று பலவாறு போற்றித் துதித்தான்.

நாம் மேலே பார்த்த கதை திருவிளேயாடல் புராணத்தில் இடம் பெற்றுள்ளது.

ஏதாவது ஒரு புறக் காரணத்தைக் கொண்டு நடப்பது நடந்தே தீரும் என்பதை இந்தக் கதை தெளிவாக உணர்த்துகிறது.

நமது செயலால் ஆவது ஒன்றுமில்லே, தேவ ரகசியம் அறிய இயலாது, மக்கள் மதிக்கத் தக்க வகையில் மன்னன் வாழ்ந்தான், அரசனுக்கு இருந்த தெய்வ நம்பிக்கை, நம்பினேருக்குத் தெய்வம் வழி காட்டும் என்ற உண்மைகளே இந்தக் கதையின் மூலம் அறிகிரேம். △

---

தேவர்களே! கிழவனுடைய அறிவு முதிர்ச்சியும், நடுவயதிற்குள்ள மன உறுதியும், இளேஞருக்குடைய உற்சாகமும், குழந்தையின் இதயமும் எனக்கு எப்போதும் நிலேத்திருக்கும்படி அருள் செய்க.
— மகாகவி பாரதி

பெரும்பாலோர் தங்கள் நலத்தையே தாங்கள் தேடிக்கொள்கிருர்கள். சிற்சிலர் தங்கள் உடன்பிறப்பாளர்களுக்கும் உறவினர்களுக்கும் நலன் செய்கிருர்கள். வேற்றுமையின்றி எல்லோ ருக்கும் நலம் செய்பவர்களே பாராட்டுக்கு உரியவராவர்.
— துளசிதாசர்

அகந்தை உதிக்கும்போது எல்லாமும் தோன்றும். அகந்தை இல்லாதபோது எல்லாமும் இல்லாமற்போகும். இதனுல், அகந்தையே எல்லாமும் ஆகும். ஆகையால் இந்த அகந்தையின் உண்மை என்னவென்று விசாரிப்பதே எல்லாவற்றையும் விடுவதாகும்.
—ரமண மகரிஷி



# நமது தாய்நாடு

இராம. கோபாலன்

[சுவாமி விவேகானந்தரின் கருத்துக்களின் அடிப்படையில் அமைந்த ஒரு கவிதை இது.]

ஹிந்து ராஷ்டிரமிது ஹிந்து மைந்தர் நாம்
என்று முழக்கம் செய்திடுவோம்
உலகமனைத்தும் எதிர்த்து வரினும்
சத்திய மிதனை நாட்டிடுவோம்.

அலையலையாய்ப் பல அன்னியர் வரினும்
நிலைகுலையா மாவீரர் நாம்
உலகம் உய்ந்திட ஞானச் செல்வம்
வாரி வழங்கிய வள்ளல் நாம்
உலகப் பேரரசாட்சி நடத்தினும்
மண்வெறி இல்லா மாண்பினர் நாம்
தியாகமும் தவமும் நேர்மை ஒழுக்கமும்
வாய்ந்த பரம்பரைத் தோன்றல் நாம்
ஹிந்துவை உலகம் பாடிப் புகழ்ந்தே
வாழ்த்தித் துதித்து வணங்குகையில்
சொந்தச் சமயமும் அறமும் மறந்தே
முந்தையர் பாதையை விடுப்போமோ?
(ஹிந்து)

ஹிந்துச் சிற்பியர் உழைப்பினிலே
எழுந்த கோயில் பாரதமே
ஹிந்து மேதையர் பேணி வளர்த்த
கலைக் களஞ்சியம் பாரதமே
ஹிந்து முனிவர்தம் மாதவத்தாலே
உதித்த பேரொளி பாரதமே
ஹிந்து வீரர்தம் உதிரத்தாலே
விளைந்த நற்பயிர் பாரதமே
ஹிந்து ஹிந்துவென பாரதநாட்டின்
அணு அணுதோறும் முழங்குகையில்
அஞ்சிக் கெஞ்சி மனவாட்டம் கொண்டே
தலைகுனிந்தினி நிற்போமோ? (ஹிந்து)

காசியும் கயிலையும் ராமேச்வரமும்
நம்முடை ஒருமை உணர்த்திடுது
ராமகிருஷ்ணர்தம் பக்தி யிழையிலே
நம்முடை உள்ளம் இணைந்திடுது
செப்பும் மொழி பதினெட்டிடையேயும்
சிந்தனை ஒன்றே வாழ்ந்திடுது
காடும் மலையும் கடந்துடைத்து நம்
ஒற்றுமை அருவி பாய்ந்திடுது
ஒன்று ஒன்று எனப் பாரதநாட்டின்
வரலாறெல்லாம் பேசுகையில்
ஒருமை மறந்தே வலிவுகுன்றி நாம்
தன்னுணர் விழந்து வீழ்வோமோ?
(ஹிந்து)

ஹிந்து மைந்தர்தம் உள்ளந்தோறும்
தன்மானத் தீ மூட்டிடுவோம்
அன்பு இழையினல் பாரதநாட்டை
ஒன்று பிணைத்து நிறுத்திடுவோம்
கோடி கோடிக் கரம் பாரதத்தாயின்
தொண்டில் உயர்ந்திடச் செய்திடுவோம்
கோடி கோடிக் குரல் பாரதத்தாயின்
பண்ணிசைத்திடக் கண்டிடுவோம்
பாரதநாட்டின் வீடுகள்தோறும்
ஹிந்து மந்திரம் முழக்கிடுவோம்
வீறு கொள்ளுவோம் வெற்றி காணுவோம்
நவயுகத்தினை நிறுவிடுவோம் (ஹிந்து)

# மறுபிறவி

நாடோடி

1964-ஆம் வருடம் ஜெருசலேம் நகரில் சாமே மாரிஸ் என்னும் ஒரு பல்வைத்தியர், ஆஸ்பத்திரியில் தம் வேலையைக் கவனித்துக்கொண்டிருந்தார். அப்பொழுது அவர் மனைவி எட்னு அவரைத் தேடிக்கொண்டு வந்தாள்.

''எதற்காக இங்கு வந்தாய்?'' என்று கேட்டார் சாமே மாரிஸ்.

''எல்லாம் உங்கள் மகன் டேவிட் அடிக்கும் லூட்டி பொறுக்காமல்தான் வந்தேன். உங்களுக்குத் தெரிந்த மனோவைத்திய டாக்டர் யாரையாவது கூப்பிட்டு, டேவிட்டைப் பார்க்கச் சொல்லுங்கள். எனக்குக் கவலையாக இருக்கிறது, அவனுக்கு பைத்தியம் பிடித்துவிட்டதோ என்று'' என்ருள் எட்னு.

காரணம் என்னவென்ருல், மூன்று வயதே ஆன அவர்களுடைய மகன் டேவிட், தான் மூவாயிரம் வருஷங்களுக்கு முன்பு இருந்த யூத அரசன் டேவிட் என்று அடிக்கடி சொல்ல ஆரம்பித்ததுதான்.

''வழக்கத்தைவிட இன்று அதிகமாக உளறுகிருன். என்னவோ புரியாத மொழியில் பேசுகிருன். அதுதான் பயந்துபோய் உங்களைப் பார்க்க வந்தேன்'' என்ருள் எட்னு.

சாமே மாரிஸ் தம் உதவியாளரைத் தம் வேலையைக் கவனித்துக்கொள்ளும்படி சொல்லிவிட்டு, மனைவியுடன் வீட்டுக்கு வந்தார்.

டேவிட் முன்னறையில் உட்கார்ந்துகொண்டு பிளாஸ்டிக் துண்டுகளையும் மரத் துண்டுகளையும் கொண்டு கோட்டையைப் போன்ற ஏதோ ஒன்று கட்டிக்கொண்டிருந்தான்.

அதைக் கண்டதும் அவன் தாய்க்கு மிகவும் கோபம் வந்தது. எல்லாவற்றைபும் காலால் உதைத்துத் தள்ளினுள். ''எத்தனை தடவை உனக்குச் சொல்வேன், முன் அறையில் விளையாடி ஜமக்காளத்தைப் பாழடிக்காதே என்று?'' என்று சீறினுள்.

டேவிட் கட்டியிருந்த கோட்டையைப் பார்த்ததும், அதுமாதிரி ஒன்றைத் தாம் எங்கோ பார்த்துவந்த நினைவு மாரிஸுக்கு வந்தது. எங்கே பார்த்தோம் என்று சிந்தித்தார்.

ஆ! ஞாபகம் வந்துவிட்டது. அவர் ஒரு சமயம் தொல் பொருள் காட்சிச்சாலைக்குச் சென்றிருந்தார். மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு டேவிட் அரசர் கட்டிய கோவிலின் படம் ஒன்று அங்கே மாட்டப்பட்டிருந்தது.

அதேமாதிரி இங்கும் டேவிட் கட்டியிருக்கவே, மாரிஸுக்கு ஆச்சரியமாக இருந்தது. அந்தப் படத்தை இதற்கு முன்னர் டேவிட் பார்த்ததில்லை. அந்தக் கோவிலின் மேற்கத்திய சுவர் ஒன்றுதான் இப்பொழுது எஞ்சி நிற்கிறது. அதை 'அழும் சுவர்' என்று அழைக்கிருர்கள். யூதர்கள் அதன் பக்கத்தில் நின்றுகொண்டு அழுவது வழக்கம்.



இதற்குள் டேவிட் ஏதோ பேச ஆரம்பித்தான். அவன் பேசிய மொழி பெற்ரேருக்குப் புரியாத மொழியாக இருந்தது. அதில் வந்த ஒரு வார்த்தைதான் மாரிஸுக்கு விளங்கிற்று. குழந்தை அடிக்கடி 'ஆ, ஆ' என்று சொன்னுன். 'ஆ' என்ருல் பழைய காலத்து ஹீப்ரு மொழியில் கோவில் என்று அர்த்தம்.

மாரிஸ் தம் மனைவியைப் பார்த்து, ''டேப் ரிகார்டரை எடு, சீக்கிரம்'' என்ருர். அவள்

ஓடிப்போய் டேப் ரிகார்டரைக் கொண்டு வந்தாள். தகப்பனார் மகன் சொன்ன வார்த்தைகளை டேப் ரிகார்டரில் பதிவு செய்துகொண்டார்.

''டேவிட்டைப் பார்த்துக்கொள். இதோ நான் வருகிறேன்'' என்று சொல்லிவிட்டு, மாரிஸ் அந்த டேப்பை எடுத்துக்கொண்டு, காரில் தொல்பொருள் ஆராய்ச்சி நிலையத்தை நோக்கிச் சென்றார். அங்கு இவருடைய நண்பர் டாக்டர் ஸ்வீ ஹெர்மான் பழங்கால மொழி ஆராய்ச்சித் தலைவராக இருந்தார்.

டாக்டர் ஸ்வீ ஹெர்மான் பழைய ஹிப்ரு மொழியில் வல்லுநர். பைபிள் சம்பந்தமான சரித்திரத்தையும் நன்கு ஆராய்ச்சி செய்திருந்தார்.

''இந்த டேப்பை உங்கள் டேப் ரிக்கார்டரில் போட்டுப் பாருங்கள்'' என்று சொல்லி, தம் கையில் கொண்டுவந்திருந்த டேப்பை மாரிஸ் டாக்டர் ஹெர்மானிடம் கொடுத்தார்.

டேப்ரிகார்டரிலிருந்து வந்த சப்தத்தைக் கேட்டு, டாக்டர் ஹெர்மான் ஆச்சரியப்பட்டார். ''பழையகால ஹீப்ருமொழியில் யாரோ பேசியிருக்கிறார்கள். பழைய ஹிப்ரு மொழியை இத்தனை சுத்தமாகப் பேசுகிறவர்களை இப்போதுதான் பார்க்கிறேன். இந்தக் காலத்தில் பழைய ஹிப்ரு மொழியை இத்தனை அழகாகப் பேசக்கூடியவர்களும் இருக்கிறார்கள் என்று தெரிய ஆச்சரியமாக இருக்கிறது. இது ஏதாவது நாடகத்தின் வசனமா என்ன? ஓர் அரசன் தன் பிரஜைகளைப் பார்த்து, 'நான் சொல்கிறபடி கேளுங்கள். உங்களை முன்னுக்குக் கொண்டுவருவது என் பொறுப்பு' என்று சொல்வது போல வருகிறது. ஆமாம், அரசன் வேஷம் போட்ட கலைஞன் யார்?'' என்று கேட்டார்.

இதைக் கேட்டதும் டாக்டர் மார்ரிஸ் அப்படியே கதிகலங்கிப் போய், ''இதைப் பேசினவன் என் மூன்று வயது மகன் டேவிட்'' என்று சொல்லி, சோபாவில் விழுந்து மூர்ச்சையானார்.

டாக்டர் ஹெர்மான் தண்ணீர் கொண்டு வந்து அவரது மூர்ச்சையைத் தெளிவித்தார். பிறகு டேவிட்டைப்பற்றி எல்லா விஷயங்களையும் கேட்டறிந்த டாக்டர் ஹெர்மான், ''நீங்கள் சொல்லும் தகவல்களைக் கேட்டபிறகு எனக்குத் தங்கள் மகன் ஒரு ஜன்மத்தில் டேவிட் அரசராகப் பிறந்திருக்க வேண்டும் என்றுதான் தோன்றுகிறது. ஆனால் இந்த விஷயத்தை நீங்கள் வெளியில் யாருக்கும் சொல்ல வேண்டாம். சொன்னால் உங்களைப் பைத்தியக்காரர் என்றோ அல்லது உங்கள் பிள்ளையைப் பைத்தியக்காரன் என்றோ நினைத்துப் பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கு அனுப்பிவிடுவார்கள்'' என்றார். ☆

---

பாவத்தைச் செய்தபின், அதைச் சான்றோரிடம் சொன்னால் நிவர்த்தி உண்டு.

—மகாபாரதம்

உள்ளும் புறமும் ஒத்திருப்பதாக; அகமனிதனும் புறமனிதனும் ஒரே மனிதனாக இருப்பானாக.

— சாக்ரடீஸ்

அமைதிக் கடல் அதோ உன் முன்னே இருக்கிறது. தியானம், ஜபம் ஆகிய துடுப்பினால் உன் தோனியை அங்கே தள்ளிச் செலுத்துவாயாக.

—ஒரு சாது

இதயத்தில் சமயப்பற்று இல்லாமல் அறிவாற்றலை மட்டும் வளர்த்துக்கொள்வதை நாகரிகம் என்று எண்ணுகிறோம். ஆனால் அதைப் போன்ற அநாகரிகம் வேறு எதுவும் கிடையாது. அத்தகைய அறிவாற்றல் மறைமுக மிருகப்பான்மையில் கொண்டு வரும்.

—பஸென்



அருள்நெறிக் கதை

# சீதையின் தோற்றம் — பல கதைகள்

'வால்மீகி'

யார் யாரோ பெற்ற சாபங்களும், பலருடைய கர்மகதியும் கைகேயி, கோசலை, சீதை, ஸ்ரீராமன் ஆகியவர்களுடைய போக்கை நிர்ணயித்தன என்பதைப்பற்றி விரிவான கதைகள் உண்டு.

என்றாலும் அவை ஒன்றுக்கு ஒன்று முரண்படாமலும் கோவையாகவும் இருப்பதுதான் புராதன காவியங்களிலும் இதிகாசங்களிலும் நாம் காணும் அதிசயம்.

ராமாவதார காரண காரியங்கள் வால்மீகியின் காவியத்தில் ஒரே இடத்தில் அல்லாமல் பல இடங்களில் பரவலாகக் கூறப்படுகின்றன.

ஆனல் அவற்றுக்குள் முரண்பாடு சிறிதும் இல்லை. முரண்பாடு தோன்றக் கூடிய இடங்களிலே மௌனம் சாதிக்கப்பட்டு விடுவது விசேஷமானது.

உதாரணமாக, சீதையின் வரலாற்றை எடுத்துக்கொண்டால் சீதையை ராவணனின் பெண் என்கிறது ஆனந்த ராமாயணம். இதற்கு முரண்பாடு இல்லாத வகையில் ஜனக மகாராஜன் யாகம் செய்வதற்காகத் தங்கக் கலப்பையைக் கொண்டு யாகசாலையை உழுதபொழுது பூமிக்கு அடியில் ஒரு பெட்டிக்குள்ளிருந்து கிடைத்தாள் சீதை என்கிறது வால்மீகி ராமாயணம். அவள் எப்படி அந்தப் பெட்டிக்குள் வந்தாள், அவளுடைய பெற்றோர் யார் என்பவை பற்றி வால்மீகி மௌனம் சாதிக்கிறார். அவர் சொல்லாமல் விட்டதை ஆனந்த ராமாயணம், ஸார காண்டம், மூன்றாவது ஸர்க்கத்தில் நாம் காண்கிறோம். இதோ அந்த வரலாறு—

பத்மாக்ஷன் என்ற மன்னன் கடுந்தவம் புரிந்து மகாலட்சுமியையே தன் புதல்வியாகப் பெற விரும்பினன். அவனது தவத்தை மெச்சித் திருமாலும் லட்சுமியும் அவனுக்குக் காட்சி கொடுத்தார்கள். அரசன் தன் ஆசையை அவர்களிடம் வெளியிட்டபின் மகாலட்சுமி அவனிடம் ஒரு மாதுளம்பழத்தைக் கொடுத்து, ''உன் விருப்பம் நிறைவேறும்'' என்று அருள் பாலித்தாள்.

அரசன் அந்தப் பழத்தை அரண்மனைக்குக் கொண்டு வந்ததும் அது அழகான குழந்தையாக மாறியது. பத்மாவதி என்று குழந்தைக்குப் பெயரிட்டு அருமையாகக் குழந்தையை அவன் வளர்த்து வந்தான்.

பத்மாவதி வளர்ந்து திருமணப் பருவத்தை அடைந்தாள்.

பகவானே தன் மாப்பிள்ளையாக வரவேண்டும் என்று விரும்பிய மன்னன் பத்மாக்ஷன் தன் மகளை மணம் புரிய வருபவனுக்குச் சுலபத்தில் நிறைவேற்ற முடியாத ஒரு நிபந்தனையை விதித்தான்.



பகவான் நீலமேகசியாமளவர்ணன் அல்லவா? அதை நினைவில் கொண்டு, வானத்து நீலத்தை எவன் எடுத்துச் சந்தனமாகப் பூசிக்கொண்டு வருகிறானே அவனே பத்மாவதியை மணக்கத் தகுதியுடையவன் என்று பறைசாற்றினன். இது சாதாரண மனிதர்களால் நடக்கக் கூடியதா? அரசன் போகாத ஊருக்கு வழிதேடுகிறான் என்று ஆத்திரமடைந்து பல அரசர்கள் படையெடுத்து வந்து பத்மாக்ஷனைக் கொன்றுவிட்டார்கள். பத்மாவதியைப் பலாத்காரமாகத் தூக்கிச் செல்ல அவர்கள் முயன்ற பொழுது அவள் அக்கினி

குண்டத்துக்குள் புகுந்து மறைந்துவிட்டாள்; எதிரிகள் ஏமாந்து திரும்பியதும் அவள் வெளியே வந்தாள்.

அந்தச் சமயம் பார்த்து ராவணன் புஷ்பக விமானத்தில் அந்தப் பக்கமாக வந்தான். அக்கினிகுண்டத்தின் அருகில் அழகான பெண் கவலையோடு நிற்பதைக் கண்டதும் விமானத்தி லிருந்து இறங்கி வந்து அவளுடைய வரலாற்றை விசாரித்தான்.

பத்மாவதி தன் வரலாற்றைக் கூறவே, ''உனக்குப் பொருத்தமான கணவன் நான்தான்; என்னுடன் இலங்கைக்கு வந்துவிடு!'' என்று அழைத்தான். அவள் மறுக்கவே பலாத்கார மாகப் பத்மாவதியைப் பிடித்து இழுத்தான் ராவணன்.

ஆத்திரமடைந்த பத்மாவதி, ''ராவணா! நிராதரவான ஒரு பெண்ணிடம் நீ பலாத் காரத்தைப் பிரயோகிக்க முற்பட்டமையால் இனி எந்தப் பெண்ணை நீ பலாத்காரமாகச் சேர முயன்றாலும் உன் உடல் ஆயிரம் துண்டுகளாக வெடித்துவிடும் என்று உனக்குச் சாபம் கொடுக் கிறேன். விரைவில் நானே உன் பெண்ணாக மறு பிறவி எடுத்து வந்து உன்னையும் உன் குலத் தையும் அழிப்பேன்'' என்று சொல்லிவிட்டு அக்கினிகுண்டத்தில் புகுந்து மறைந்தாள்.



இந்தச் சாபத்தை ராவணன் மறக்கவில்லை. அன்றுமுதல் எந்தப் பெண்ணையும் பலாத்காரத்தி னால் சேருவதை விட்டொழித்தான். சீதையை அசோகவனத்தில் வைத்திருந்தபொழுதுகூட அவளிடம் பலாத்காரப் பிரயோகம் செய்ய ராவணன் அஞ்சியதற்குக் காரணம் பத்மாவதி கொடுத்த சாபத்தை நினைவில் கொண்டுதான்.

இதன் பிறகு ராவணன் பல இடங்களுக்கும் திக்விஜயம் செய்தான். ஒவ்வொரு மகரிஷியைக் கொல்லும்போதும் அவருடைய உடலிலிருந்து ஒரு துளி இரத்தத்தை எடுத்து ஒரு பானையில் அவன் சேர்த்து வைப்பது வழக்கம். இப்படி மகரிஷிகளின் இரத்தம் அடங்கிய பானையை அவன் பத்திரமாக அரண்மனையில் பாதுகாத்து வைத்திருந்தான்.

ஒருசமயம் யமதர்மனை ஜயிக்க அவன் கிளம்பிய பொழுது தன் பட்டத்து ராணி மண்டோதரி யிடம், ''மண்டோதரி! ரிஷிகளின் இரத்தம் அடங்கிய கலயத்தைப் பத்திரமாகப் பார்த்துக் கொள்'' என்று சொல்லிவிட்டுப் போனான்.

அவன் போனபிறகு, 'அந்த இரத்தத்தைக் கொஞ்சம் குடித்தால் தெரியவா போகிறது?' என்று எண்ணி மந்தோதரி எடுத்துக் குடித்து விட்டாள். அதுவே அவளுடைய வயிற்றில் கருவாக வளர்ந்துவிட்டது. காலக் கிரமத்தில் ஒரு பெண்குழந்தையும் பிறந்தது. பிறந்த குழந்தைக்குள் மகாலட்சுமி தன் சாபத்தை நிறை வேற்றுவதற்காகப் புகுந்துகொண்டாள்.

ராவணன் இல்லாத சமயத்தில் கர்ப்பமுற்று குழந்தையைப் பெற்ற மண்டோதரி, 'எப்படி இந்தக் குழந்தை பிறந்தது என்று ராவணன் கேட்டால் என்ன பதில் சொல்வது?' என்று பயந் தாள். அரண்மனைச் சோதிடரை அழைத்து இரகசியமாக அவரிடம் விஷயத்தைச் சொல்லி, அவருடைய யோசனையைக் கேட்டாள்.

குழந்தையின் ஜாதகத்தைக் கணித்த சோதிடர், ''இந்தக் குழந்தையினால் இலங்கை யும் அரக்கர்குலமும் அழியப்போகிறது. இப் பொழுதே இந்தக் குழந்தையைக் கொன்றுவிடு. இல்லாவிட்டால் உன் வம்சமே அழிந்துபோகும்'' என்று கூறி மண்டோதரியை எச்சரித்தார்.

பெற்ற குழந்தையைக் கொல்ல எந்தத் தாய்க்கு மனம் வரும்? ஒரு பெரிய பெட்டிக்குள் குழந்தையை வைத்துக் கடலில் வீசி எறிய அவள் ஏற்பாடு செய்தாள்.

அந்தப் பெட்டி அலைகளினால் அடித்துச் செல்லப்பட்டு வடக்கு நோக்கிச் சென்று மிதிலா புரிக் கரையின் அருகில் ஒதுங்கியது. காலக்

கிரமத்தில் அந்தப் பெட்டி மண்ணில் புதைந்து போயிற்று. மிதிலாபுரி மன்னனின் யாகசாலையை உழுதபொழுது கிடைத்தது அந்தப் பெட்டிதான்.

பூமிக்குள்ளிருந்து ஒரு பெண் கிடைத்ததனுல் சீதை என்று குழந்தைக்குப் பெயரிட்டு ஜனகர் வளர்த்தார்.

மகாலட்சுமியின் அம்சமான பத்மாவதியின் சாபம் நிறைவேற வேண்டுமானுல் சீதை ராமனை மணக்க வேண்டும்; ராமனுடன் அவள் காட்டுக்குப் போகவேண்டும். ராவணன் அவளைத் தூக்கிச் சென்று அதுவே அரக்கர்குல அழிவிற்குக் காரணமாகவும் அமைய வேண்டும். ராமன் காட்டுக்குப் போக, பரதன் பாராள வேண்டும் என்று தசரதரிடம் கைகேயி சாகஸம் செய்திராவிட்டால் மகாலட்சுமியின் அம்சமான பத்மாவதியின் சாபம் பலிக்குமா? அரக்கர்குலம் தான் அழியுமா?

திருமாருக்கு நாரதரும் பிறகு முனிவரும் கொடுத்த சாபம், ஜய விஜயர்களுக்கு ஸனத் குமாரர்கள் கொடுத்த சாபம், தசரதனுக்கு ஒரு மகரிஷி கொடுத்த சாபம், ராவணனுக்குப் பத்மாவதி கொடுத்த சாபம், 'அரக்கர்குலத்தை அழிக்க மனிதனுக வந்து பிறப்பேன்' என்று தேவர்களுக்குத் திருமால் செய்து கொடுத்த பிரதிக்கினை முதலான எவ்வளவோ சத்தியங்களையும் சாபங்களையும் பொய்யாக்கி விடாமல் காப்பாற்ற, கைகேயியைப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறது தர்மதேவதை.

இவை அனைத்தையும் மனதிற் கொண்டு பார்த்தால் கைகேயியைக் குற்றவாளியாகக் கருத முடியுமா ?

'விரும்பாத பெண்ணைப் பலாத்காரப்படுத்தினுல் உன் தலை ஆயிரம் சுக்கலாக ச்சிதறிப்போய்விடும்' என்று ராவணனுக்குப் பத்மாவதி சாபம் கொடுத்த வரலாற்றைப் போலவே, வால்மீகி ராமாயணம் உத்தர காண்டத்தில் இன்னெரு வரலாறு காணப்படுகிறது.

பிருகஸ்பதியின் புத்திரரான குசத்வஜன் வேதங்களின் ஆழத்தை அறிந்த பிரம்மரிஷி. அவருடைய வேத அறிவே உருவெடுத்து வந்ததைப் போல அவருக்கு ஒரு பெண். அந்தப் பெண்ணின் பெயர் வேதவதி. அவளுடைய பேரழகில் மயங்கிய தம்பு என்ற மன்னன் குசத்வஜனைக் கொன்று வேதவதியை அடையப் போட்டியிட்டான். ஆனுல் பாற்கடலில் பள்ளி கொண்டிருக்கும் பரந்தாமனைத் தவிர வேறு யாருக்குமே தன் பெண்ணைக் கொடுக்க முடியாது என்று குசத்வஜன் மறுத்துவிட்டான். இதனுல் ஆத்திரமடைந்த தம்பு என்ற மன்னன் குசத்வஜனைக் கொன்றுவிட்டான். தந்தை இறந்துவிடவும் வேதவதி மாயமாக மறைந்து போய்விட்டாள். தந்தையின் விருப்பத்தை நிறைவேற்ற, எப்படியும் பகவானையே கணவனுக அடைவதென்ற உறுதியுடன், அவள் இமயமலைச் சாரலில் கோரமாகத் தவம் செய்து கொண்டிருந்தாள்.

அந்தப் பக்கம் வந்த ராவணன் வேதவதியின் அழகில் மயங்கினுன். தன் வீரதீரப் பிரதாபங்களை எடுத்துச் சொல்லி அவளை அடைய ராவணன் முயன்ருன். திருமாலைத் தவிர வேறு எவரும் தன்னைத் தீண்ட முடியாது என்று வேதவதி அழுத்தமாகச் சொல்லவே, ஆத்திரமடைந்த ராவணன் பலாத்காரமாக அவளைப் பிடித்திழுத்தான்.

அவனிடமிருந்து தன்னை விடுவித்துக்கொண்ட வேதவதி, ''ராவணு! நீ யாரென்பது எனக்குத் தெரியும். என் தவ மகிமையினுல் இந்த இடத்திலேயே உன்னைச் சுட்டுச் சாம்பலாக்கியிருப்பேன். என்ருலும் உனக்குப் பிரம்மதேவன் கொடுத்த வரம் என்னைக் கட்டுப்படுத்தி வைத்திருக்கிறது. உன்னைக் கொன்று என் தவத்தையும் நான் குறைத்துக்கொள்ள விரும்பவில்லை. ஆகையால் உன்னை இப்பொழுது உயிரோடு போக விடுகிறேன். ஆனுலும் தப்பிவிட்டதாக நினைக்காதே. உன் சாவிற்கு நானே காரணமாக இருப்பேன். அதற்காகவே நான் மறுபடியும் பிறப்பேன்'' என்று சொல்லிவிட்டுத் தீக்குளித்துத் தன் உயிரை மாய்த்துக்கொண்டாள்.

அவள்தான் வைகாசி மாதம் சுக்லபட்ச நவமியில் ஜனகமகாராஜன் யாகசாலையை உழுத பொழுது நுகத்தடியிலிருந்து ஒரு குழந்தையாக மறுஜன்மம் எடுத்தாள் என்கிருர் வால்மீகி.

மிதிலாபுரி மன்னன் ஜனக மகாராஜனின் குலத்திலே சீதையாக மறுஜன்மம் எடுத்தாள் வேதவதி.

இந்தக் கதைக்கும் ஆனந்த ராமாயணத்திலுள்ள பத்மாவதியின் கதைக்கும் பெயர்களில் மட்டும்தான் வித்தியாசம் தென்படுகிறதே தவிர, வேறு வித்தியாசங்கள் இல்லை என்பது கவனிக்கத்தகுந்தது. பத்மாவதி ராவணன் மனைவி மந்தோதரியின் குழந்தையாகப் பெட்டியில் வைத்துக் கடலில் வீசப்பட்டு ஜனகனிடம் பிறகு அகப்பட்டாள். வேதவதியோ கர்ப்பவாசம் இல்லாமல் தீக்குளித்து உயிரை விட்டதும் குழந்தையாக மாறி ஜனகனிடம் அகப்பட்டாள். திருமால் ஒவ்வோர் அவதாரத்திலும் கர்ப்பவாசம் செய்து எல்லா மனிதக் குழந்தைகளும் பிறப்பதைப் போலவே பிறந்து வளர்ந்து திருவிளையாடல்களை நடத்தியிருக்கிறார்.

அவர் அவதரித்த பொழுதெல்லாம் கூடவே மனித அவதாரம் எடுத்த மகாலட்சுமி கர்ப்பவாசம் செய்ததேயில்லை. குசத்வஜனுக்கு வேதவதியாகப் பிறந்தபோதும் சரி, மகாலட்சுமி கர்ப்பவாசம் இன்றிக் குழந்தையாகவே அவரிடம் அகப்பட்டு வளர்ந்தாள். கிருஷ்ணன் மனைவி ருக்மிணி, ஆண்டாள், ஸ்ரீநிவாசப் பெருமாள் மனைவி அலர்மேல்மங்கை, சார்ங்கராஜப்பெருமாள் மனைவி கோமளவல்லி, ஸ்ரீரங்கம் ஸ்ரீரங்கராஜப்பெருமாள் மனைவி அரங்கநாயகி முதலான எல்லோருடைய சரித்திரத்திலும் லட்சுமி கர்ப்பவாசமின்றித் தோன்றியதாகவே கருதப்படுகிறது. ●

---

# பிரம்மா



ஒரு சமயம் அசுரர்கள் பிரம்மாவிடம் சென்று, ''தாங்கள் எங்களுக்கும் தேவர்களுக்கும் பிதாவைப் போன்றவர்கள். அப்படி இருக்க, தாங்கள் அவர்களை அதிகமாகக் கவனித்து, எங்களைக் கவனிக்காமல் இருக்கிறீர்கள்'' என்று சொன்னார்கள். அதற்குப் பிரம்மா, ''என் பார்வையில் நீங்கள் எல்லாரும் சமம்தான். ஆனால் யாரும் முன்னுக்கு வருவது அவர்களுடைய உழைப்பையும் முயற்சியையும் அவர்களிடையே உள்ள ஒற்றுமையையும் பொறுத்திருக்கிறது'' என்று சொன்னார்.

இதை அசுரர்கள் நம்ப மறுக்கவே, அவர்களுக்கு இதை நிருபித்துக் காட்டுவதாகப் பிரம்மா சொன்னார்.

சீக்கிரமே ஒரு விருந்துக்கு ஏற்பாடு செய்து, அதற்கு அசுரர்களை அழைத்தார். விருந்தில் பெரிய பெரிய லட்டுகள் போடப்பட்டன. ''இந்த லட்டுகளைச் சாப்பிடும்போது நீங்கள் யாரும் முழங்கையை மடிக்கக் கூடாது. முழங்கையை மடிக்காமல் நீட்டின கையால் சாப்பிட வேண்டும்'' என்று சொன்னார்.

ஒவ்வோர் அசுரனும் தன் எதிரே இருந்த லட்டை முழங்கையை மடக்காமல் வாய்க்குள் போட்டுக்கொள்ளப் பார்த்தான். ஆனால் அதைச் செய்ய முடியாமல் லட்டு கீழே விழுந்து உடைந்ததுதான் மிச்சமாயிற்று. விருந்தில் லட்டைத் தவிர வேறு எதுவும் படைக்கப்படவில்லை; ஆதலால் அசுரர்கள் பசியோடு திரும்ப வேண்டி வந்தது.

அவர்களுக்கு எதிரிலேயே, பிரம்மா தேவர்களை விருந்துக்கு அழைத்தார். அவர்களுக்கும் லட்டுகள் போடப்பட்டன. 'முழங்கையை மடக்காமல் சாப்பிட வேண்டும்' என்ற விதி அவர்களுக்கும் விதிக்கப்பட்டது. ஆனால் தேவர்களோ, ஒவ்வொருவரும் லட்டை எடுத்துத் தன் வாயில் போட்டுக்கொள்ளாமல், எதிரே இருந்தவரின் வாயில் போட ஆரம்பித்தார்கள். இதனால் தேவர்கள் எல்லாரும்வயிறு நிறையச் சாப்பிட்டார்கள்.

உடனே பிரம்மதேவன் அசுரர்களைப் பார்த்து, ''நான் பாரபட்சமின்றி இரண்டு பேருக்கும் ஒரே மாதிரிதான் விருந்து வைத்தேன். நீங்கள் எல்லாரும் சுயநல வாதிகளாக இருந்ததனால், ஒருவருக்கும் சாப்பாடு கிடைக்கவில்லை. ஆனால் தேவர்களோ தங்களைப்பற்றி நினைக்காமல் பிறருக்கு உணவு கொடுப்பதில் கவலையாக இருந்தார்கள். அதனால் அவர்கள் எல்லாருக்கும் உணவு கிடைத்தது. வாழ்க்கையில் எந்தச் சமூகத்தில் எல்லோரும் தங்களை மறந்து பிறருக்காக உழைக்க ஆரம்பித்திருக்களோ, அந்தச் சமூகம்தான் முன்னுக்கு வரும்'' என்றார்.

# ஓம் உபநிஷதம்:

'அண்ணா' சுப்ரமண்யம்

## ந்ருஸிம்ஹ பூர்வதாபினீ உபநிஷதம்

['பத்ரம் கர்ணேபி:' என்ற சாந்திபாடத்தைக் கொண்ட இந்த உபநிஷதம் அதர்வ வேதத்தைச் சேர்ந்தது.]

மனித வடிவும் சிங்கவடிவும் ஒருங்கே கொண்ட பகவான் நரசிம்மர் ரிதமாகவும் (காணும் உலகில் ஒழுங்காகவும்), சத்தியமாகவும் (அடிப்படை உண்மையாகவும்) விளங்கும் பரப்பிரம்மம். அவர் கறுப்பாகவும் பொன் சிவப்பாகவும் இரண்டு வர்ணமுடையவராகக் காட்சியளிக்கிறார்.

அவர் ஊர்த்வரேதஸ் (உயிர்ச்சத்து மேல் நோக்கிப் பாயும் இயல்பினர்). பயங்கரமான பார்வை யுடையவர். என்றும் எல்லோருக்கும் மங்களத்தைச் செய்யும் சங்கரர். கழுத்தில் கறுப் பாகவும் அதற்கு மேலே பிரகாசமான சிவப்பு வர்ணமும் படைத்தமையால் 'நீலலோஹிதர்' எனப்பெறுவார்.

ஸர்வதேவமயமான பகவான் நரசிம்மர் இன்னொரு வடிவில் உமாபதியும் பசுபதியுமான பரமசிவன் ஆவார். பினாகம் என்னும் வில்லை ஏந்தியவராகவும், அளவற்ற பிரகாசம் பொருந்தியவராகவும் விளங்குவார். அவர் எல்லா வித்யைகளுக்கும் ஈசுவரராகவும், எல்லா உயிர்களுக்கும் ஈசுவரராகவும், வேதத்திற்கு அதிநாயகராகவும், பிரம்மாவுக்கும் தலைவராக வும், யஜுர்வேதத்தால் போற்றப்பெறுபவ ராகவும் உள்ளவர். அவரைப்பற்றிய ஸாமத்தை (துதியை) அறிய வேண்டும். அதை அறிபவர் சாகாத்தன்மையை (முக்தியை) எய்துவர்.

* * *

தேவர்கள் சாவுக்கும் பாவங்களுக்கும் சம்சாரத்துக்கும் அஞ்சினார்கள். பிரம்மா, அவர் களுக்கு அனுஷ்டுப் சந்தத்திலுள்ள மந்திரங் களுக்கு அரசான நரசிம்ம மந்திரத்தை உபதேசித் தார். அதனால் தேவர்கள் அனைவரும் மரணத்தை ஜயித்தார்கள். எல்லோரும் பாவத்தைக் கடந்தார்கள்; சம்சாரத்தைத் தாண்டினார்கள்.

ஆகையால் எவர் சாவிற்கும் பாவங்களுக்கும் சம்சாரத்திற்கும் அஞ்சுகிறாரோ அவர் இந்த அனுஷ்டுப் சந்தத்திலுள்ள மந்திரராஜம் எனப்படும் நரசிம்ம மந்திரத்தை உபதேசம் பெற்றுக்கொள்ள வேண்டும். அவர் சாவை வெல்லுவார், பாவத்தைக் கடப்பார், சம்சாரத் தைத் தாண்டுவார்.

**மந்த்ரராஜம்:—**

உக்ரம் வீரம் மஹாவிஷ்ணும்
ஜ்வலந்தம் ஸர்வதோமுகம் ।
ந்ருஸிம்ஹம் பீஷணம் பத்ரம்
ம்ருத்யும்ருத்யும் நமாம்யஹம் ॥

எதனால் தமது மகிமையால் எல்லா உலகங் களையும் எல்லாத் தேவர்களையும் எல்லா ஜீவர் களையும் எல்லாப் பூதங்களையும் கவருகிறாரோ, இடைவிடாமல் சிருஷ்டிக்கிறாரோ வளர்க் கிறாரோ அழிக்கிறாரோ, உயர்த்திவிடச் செய்கிறாரோ உயர்த்திவிடுகிறாரோ, அதனால்

'உக்ரம்' எனப்படுகிறார். நாசிம்மரே! என்னால் போற்றப்பெறும் தாங்கள் அழியும் இந்த உடலில் இருக்கும்போதே எனக்கு அழியாத இன்பத்தை அருளுவீராக. உம்முடைய கணங்கள் எம்மிட மிருந்து வேறான சத்துருவை அழிக்கட்டும்.

எதனால் தமது மகிமையால் எல்லா உலகங் களையும் எல்லாத் தேவர்களையும் எல்லா ஜீவர் களையும் எல்லாப் பூதங்களையும் விளையாடச் செய்து, ஓய்வளித்து, இடைவிடாமல் சிருஷ் டித்து வளர்த்துக் கவர்ந்து கொள்கிறாரோ, அதனால் 'வீரம்' எனப்பெறுகிறார். பகவான் வீரர், கருமங்களை இயக்குவிப்பவர், திறமை மிக்கவர், மலை போன்றவர், தேவர்களின் விருப்பத்தைப் பூர்த்தி செய்பவர்.

அவர் எல்லா உலகங்களையும் வியாபிக்கிறார், வியாபிக்கச் செய்கிறார். எங்ஙனம் மாமிசத்தில் கொழுப்புப் பசை குறுக்கும் நெடுக்கும் பரவி யுள்ளதோ அங்ஙனம் ஊடுருவி நிற்கிறார். அதனால் 'மகாவிஷ்ணு' எனப்படுகிறார். அவருக்கு வேறாக உலகில் உண்டான பொருள் எதுவும் இல்லை. அவர் உலகம் முழுவதிலும் புகுந்து உறைகிறார். அவர் உயிர்களின் நாயகர். உயிர்களின் உபாஸனையே அவர் உபாஸனை. அவர் (சூரியன் சந்திரன் அக்கினி ஆகிய) மூன்று ஜோதிகளிலும் விளங்குகிறார். அவர் பதினாறு கலைகளுடன் பரிபூர்ணமானவர்.

எதனால் தமது மகிமையால் எல்லா உலகங் களையும் எல்லாத் தேவர்களையும் எல்லா ஜீவர் களையும் எல்லாப் பூதங்களையும் தமது பிரகாசத்தால் பிரகாசிக்கச் செய்கிறாரோ, அவற் றில் ஜ்வலிக்கிறாரோ, அவற்றை ஜ்வாலைவிடச் செய்கிறாரோ, அதனால் 'ஜ்வலந்தம்' எனப்படு கிறார். அவர் உலகை உற்பத்தி செய்து பலவாய்ப் பெருக்குபவர். பிரகாசத்தால் தாம் பிரகாசித்து மற்றவற்றையும் பிரகாசிக்கச் செய்பவர். தாம் ஜ்வலித்து மற்றவற்றையும் ஜ்வலிக்கச் செய்பவர். உஷ்ணத்தைப் பரப்பி, உலகத்தைத் தவிக்கச் செய்பவர். கிரணங்களைப் பரப்பிக் கிரணம் விடச் செய்பவர். மங்கள வடிவினர், மங்களத்தை அளிப்பவர், சுப மானவர்.

எதனால் இந்திரியங்கள் இல்லாமலே எங்கும் பார்க்கிறாரோ, எங்கும் கேட்கிறாரோ, எங்கும் செல்லுகிறாரோ, அனைத்தையும் கவர்கிறாரோ, எங்கும் வியாபித்து அனைத்திலும் உறைகிறாரோ, அதனால் 'ஸர்வதோமுகம்' எனப்பெறுகிறார். அவர் ஆதியில் தாம் ஒருவராக இருந்து இந்த அனைத்துமானார். உலகங்களைப் பரிபாலிப்ப வர்கள் அவரிடமிருந்தே உண்டானார்கள். இறுதியில் உலகம் அவரிடமே லயமாகிறது. எங்கும் முகமுள்ள அவரை நான் நமஸ்கரிக் கிறேன்.

எல்லாப் பிராணிகளுக்குள்ளும் வீரியம் மிக்கதாகவும் சிறப்பு மிக்கதாகவும் விளங்குவது சிங்கம். அதனால் பரமேச்வரர் நரசிங்கமாக அவதரித்தார். அழிவில்லாத இந்த வடிவம் உலகிற்கு உயர்ந்த நன்மை புரிவதாக ஆயிற்று. அதனால் 'நரசிம்மம்' எனப்பெறுகிறார். வீரியம் மிக்க மிருக வடிவம் கொண்ட மகாவிஷ்ணுவாகிய அவர் பக்தர்களுக்குப் பயங்கரமாக இல்லை. அவர்களால் துதித்துப் போற்றப்பெறுகிறார். அவரே பூமியில் சஞ்சரிப்பவராகவும் மலைகளில் உறைபவராகவும் உள்ளவர். அவருடைய திரிவிக்கிரம அவதாரத்தில் அவருடைய மூன்று அடிகளில் உலகங்கள் அனைத்தும் கடக்கப்படு கின்றன.

எவருடைய வடிவத்தைப் பார்த்து எல்லா உலகங்களும் எல்லாத் தேவக் கூட்டங்களும் எல்லாப் பூதங்களும் பயந்து ஒடுங்குகின்றனவோ, எவர் எதற்கும் அஞ்சுவதில்லையோ, அதனால் அவர் 'பீஷணம்' எனப்பெறுகிறார். அவருக்கு அஞ்சிக் காற்று வீசுகிறது. அவருக்கு அஞ்சிச் சூரியன் உதிக்கிறான். அவருக்கு அஞ்சியே அக்கினியும் இந்திரனும் ஐந்தாவதாக யமனும் வேலை செய்கிறார்கள்.

தாம் மங்களமே உருக் கொண்டவராகி, எப் பொழுதும் மங்களத்தை அளித்துப் பிரகாசிப்பவ ராய், பிரகாசிக்கச் செய்பவராய், உயர்நல வடிவினராய், உயர்நலத்தைச் செய்பவராய் இருப்பதனால் அவர் 'பத்ரம்' எனப்பெறுகிறார். தேவர்களே! காதுகளால் நாங்கள் அந்தப் பத்ரத்தைக் கேட்க வேண்டும். பூஜைக்கு உரியவர்களே! கண்களால் நாங்கள் அந்தப் பத்ரத்தைப் பார்க்க வேண்டும். திடமான உறுப்புக்களுடனும் உடல்களுடனும் துதித்துப்

போற்றிக்கொண்டு, தேவர்களுக்கு உவப்பான ஆயுள் எவ்வளவோ அதை அடைவோமாக.

தமது மகிமையால் தமது பக்தர்கள் தம்மை நினைத்த மாத்திரத்தில் மிருத்யுவையும் அபம்ருத்யுவையும் அவர் நாசம் செய்வதனால் 'ம்ருத்யும்ருத்யு' எனப்படுகிறார். அவர் ஆத்மஞானத்தை அளிப்பவர், பலத்தை அளிப்பவர். அவரைச் சரணடைந்து எல்லாத் தேவர்களும் போற்றுகிறார்கள். எவருடைய நிழல் அம்ருதமோ, எவர் மரணத்தை அழிக்கும் மரணமோ அந்தத் தேவனை நாம் யாகத்தில் ஹவிஸ்ஸால் திருப்தி செய்வோம்.

எல்லாத் தேவர்களும் முமுட்சுக்களும் பிரம்மவாதிகளும் வணங்குவதனாலும், வேத நாயகன் அவருக்கு உரிய மந்திரங்களால் துதிக்கிறார். அதனால் அவர் 'நமாமி' என்று இந்த மந்திரத்தில் போற்றப் பெறுகிறார். இந்திரனும் வருணனும் மித்திரனும் அர்யமாவும் எல்லாத் தேவர்களும் அவரிடமே உறைகின்றனர்.

அழகும் ஒழுங்குமே (ரிதம்) உருக் கொண்ட இந்த உலகிற்கு முன்னே உதித்தவனாக நான் இருக்கிறேன். தேவர்களுக்கும் முன்னவன் நான். அழியாப் பதவியின் நடுநிலை நான். (அன்னரூபியான) என்னை எவன் கொடுக்கிறானோ அவன் இதனால் ஆத்மரக்ஷணம் செய்தவனாகிறான். (இங்ஙனம் அறிந்து கொடுக்காவிட்டால்) உண்பவனை உணவாகிய நான் உண்டுவிடுகிறேன். உலகம் அனைத்துமாகி அதை அழிப்பவனும் நானே. (இந்த உலகம் முழுவதையும் ஒருவனாக நின்று பிரகாசிக்கச் செய்யும்) சூரியனுடைய ஒளி போன்றது என் ஒளி. எவன் இதை அறிவானோ அவன் முக்தி எய்துகிறான். (இதனால் 'அஹம்' என்ற பதமும் பரமாத்ம சொரூபத்தையே குறிக்கும் என்பது விளக்கப்பட்டது.)



## விவேகானந்தபுரம் — விவசாயப் பணி

கிராம முன்னேற்றத்திற்காக ஸ்ரீராமகிருஷ்ண மிஷனின் சார்பாக விவேகானந்தபுரம் கிராமக் கேந்திரம் 1978-ஆம் ஆண்டு துவக்கப்பெற்றது.

கிராம முன்னேற்றம், விளைச்சலை அதிகப்படுத்தல், கால்நடைகளை நன்கு பராமரித்தல், சமூகச் சீர்திருத்தம், முதியோர் கல்வி, குழந்தை நலப் பாதுகாப்பு, விவசாயிகளுக்குப் பயிற்சிப் பள்ளி அமைத்தல், மனையியல், தோட்டக் கலை, ஒழுக்கம் மற்றும் ஆன்மிகம் சம்பந்தமான செயல்களை வலிமைப்படுத்துதல் போன்ற பணிகளை விவேகானந்தபுரம் கிராமக் கேந்திரம் செய்து வருகிறது.

ஸ்ரீராமகிருஷ்ண மிஷனும், ஸ்ரீஅவினாசிலிங்கம் மனையியல் கல்லூரியும் சேர்ந்து இந்தப் பணிகளைச் செய்து வருகின்றன.

கோயம்புத்தூர், பெரியநாயக்கன்பாளையம் ஸ்ரீராமகிருஷ்ண வித்யாலயாவின் பல நிலையங்கள் இந்த விவேகானந்தபுரம் கிராமக் கேந்திரத்தின் கூட்டுறவைப் பெற்றுச் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

மத்திய அரசு நூறு குடும்பங்களுக்கு விவசாயம் செய்கிற நிலத்தில் சலுகைகளை வழங்கியிருக்கிறது. சிறுதொழில் செய்பவர்களில் 85 குடும்பங்களுக்கும், தாழ்ந்த சாதியில் ஐந்து குடும்பங்களுக்கும், மிகவும் தாழ்ந்த சாதியில் 26 குடும்பங்களுக்கும் சலுகை அளிக்கப்பட்டுள்ளது.

மத்திய அரசு ஒன்பது விவசாய ஆராய்ச்சிக் கலை அதிகாரிகளைப் பெரியநாயக்கன்பாளையம் ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் வித்யாலயாவில் நியமித்திருக்கிறது. கிராம முன்னேற்றம் பற்றிய திரைப்படங்கள் பல போட்டுக் காட்டப்படுகின்றன. கிராமத்தில் ஒரு வாரத்தில் நான்கு படங்கள் காட்டப்படுகின்றன. கிராமக் கேந்திரம் புதிதாக 'அறிவியல்' என்ற பத்திரிகையை விவசாயிகளின் நன்மைக்காக வெளியிட்டு வருகிறது.

# தெய்வம் என்ன கேட்கிறது?

வி. தியாகராஜன்

யாவையும் படைத்த இறைவன் மனிதனிடம் எதைக் கேட்கப்போகிருன் என்பது சிந்திக்கத் தக்கதொரு விஷயம். மலைபோன்ற தெய்வத்திற்கு மலை போல் நம்மால் செய்ய முடியாது. ஆனல் அணுவளவு செய்தாலும் அதை மலையளவு செய்ததாக ஏற்பது தெய்வத்தின் பெருமை.

ஒழுக்கம் கெட்ட பெண்ணெருத்தி, பல பாவங்களைப் புரிந்து, புலைச்சாதிப் பெண்ணுகக் கண்ணில்லாது பிறந்து பிச்சையெடுத்தாள். பிச்சை எடுத்தபோது எவனே ஒருவன் ஒரு வில்வத்தை அவள் கையில் இட்டான். சோறல்ல என அறிந்து அந்தக் குருடி அந்த வில்வத்தைக் கீழே எறிய, அது பக்கத்திலிருந்த ஒரு சிவலிங்கத்தின் மீது விழுந்தது.

பிச்சை கிடைக்காமல் அவள் அன்று தற்செயலாகப் பட்டினியாக இருந்தாள். அன்று சிவராத்திரி நாள். அதனல் அவளுக்குச் சிவராத்திரியன்று பட்டினிகிடந்த புண்ணியமும், வில்வார்ச்சனை செய்த புண்ணியமும் ஒருங்கே கிடைத்து நற்கதி பெற்ருள் எனப் பேசுகிறது பிரம்மோத்தர காண்டம்.

தெய்வங்களுக்கு இன்ன இன்ன மலர்கள் உகந்தவை எனப் புட்பவிதி என்ற நூல் கூறுகிறது—

வில்வமுடன் கொன்றைமலர் சங்கரற்கு நேயம்;
வேழமுகற்கு அறுகு; கடம்பு விசாகனுக்காம்;
குல்லை நெடுமாலவற்காம்; மலைமகட்கு நீலம்;
கோகனகம் சூரியற்காம்; திருமகட்கு நெய்தல்;
வல்ல கலைமடந்தைக்கு வெண்கமலம் நேயம்;
வருங்கொடிய கடவுளர்க்குச் செம்மலர்கள் நேயம்;
அல்லிமலர் கருங்குவளை அனைவருக்கும் நேயம்;
அம்மலரே எம்மலர்க்கும் அதிகம் என உரைப்பார்.

[விசாகன்-முருகன். குல்லை-துளசி. கோகனகம்-தாமரை-கொடிய கடவுளர்-உக்கிரதேவதைகள்.]

மேற்கண்ட பாடலிலிருந்து, மனிதன் உபயோகப்படுத்தாத மலர்களையே தெய்வம் ஏற்று அருள் செய்கிறது என அறிகிரேம். துளசியையும் வில்வம் போன்றவற்றையும் நாம் அணிகிரேமா? மனிதன் தின்ன முடியாத பசும்புல்லை மாடு தின்று மனிதனுக்கு அமுதமான பாலை அளிப்பது போல, நமக்குத் தெய்வம் அருளுகிறது. நல்ல மலர்கள் கிடைக்காவிட்டால், பச்சிலைகள் கிடைக்குமே. 'போதும் பெருவிடிற் பச்சிலையுண்டு' (திருக்கழுமல மும்மணிக்கோவை.) அது போதுமே வழிபாட்டிற்கு என்கிருர் பட்டினத்தார்.

ஆண்டாள் தனது கூந்தலில் சூடிக்கொடுத்த மாலைகளை இறைவனை திருமால் ஏற்று மகிழ்ந்தார் என்பது வரலாறு.

ஒரு கையில் வில்லும் மறு கையில் இறைவனுக்குப் படைப்பதற்காகப் பன்றி மாமிசமும் இருந்ததனல், அபிஷேகத்திற்கான நீரைத் தம் வாயிலே கொண்டு வந்த திண்ணனுர் தமது திருமுடியிலேயே மலர்களைச் சூடி வந்து, சிவபெருமானுக்கு அணிவிக்க, ''தேவர்கள் இடும் மலர்களைவிட இந்த மலர்கள் எனக்கு மிகவும் உவப்பை அளிக்கின்றன'' எனச் சிவபெருமான் கூறியதாகப் பேசுகிறது பெரிய புராணம்.

பக்தியுடன் வெறுந்தழை கொண்டு பூசித்தாலும் இறைவன் ஏற்பான் என்பதை,

பத்தி யடியவர் பச்சிலை இடினும்
முத்தி கொடுத்து முன்னின்றளி—என்றும்,
நொச்சி யாயினும் கரந்தை யாயினும்
பச்சிலை யிட்டுப் பரவும் தொண்டர்
கருவிடை புகாமல் காத்தருள் புரியும்
திருவிடை மருத! திரிபுராந்தக!

என்றும் பட்டினத்தார் பாடுவார். பக்தி என்பதே இல்லாமல் அளிக்கும் பச்சிலையையும் மலர்களையும் இறைவன் மிகவும் விரும்புகிருன் என்ருல் பக்தியுடன் அளித்தால் இறைவனின் மகிழ்ச்சி சொல்லவே முடியாததன்ருே? எனவே இறைவன் நம்மிடம் விரும்புவது இலையும் பூவுமே.

குசேலர் ஒரு பிடி அவலை இறைவனுக்கு அர்ப்பணம் செய்ததே காரணமாக, அந்தப்

பெருமானை ஏதும் கேட்காதபோதே குபேரத் தன்மையைப் பெற்றார். எனவே இறைவன் எது தந்தாலும் நமது பக்தியையே முக்கியமாக எதிர்பார்க்கிறான் என அறிகிறோம்.

தண்ணீரில் இருந்த தாமரையை நாராயண னுக்குச் சமர்ப்பிக்க எண்ணிய யானையைப் பிடித்துக்கொண்டது ஒரு முதலை. யானை தரையை நோக்கி முதலையை இழுக்க, முதலை யானையைத் தண்ணீருக்குள் இழுக்க, தளர்ச்சி யடைந்த யானை தண்ணீருக்குள்ளேயே இழுக்கப் பட்டுவிட்டது! ''ஆதி மூலமே! சர்ப்ப சயன மூர்த்தியே!'' என அழைத்தது. உடம்பு முழுவதும் தண்ணீருக்குள் போய், கைமாத்திரம் தண்ணீருக்கு வெளியில் தெரிந்ததாம். அந்தத் தும்பிக்கையில் ஒரு மலர் இருந்தது. யானை தன் உயிருக்காகக் கவலையடைந்து போராடவே இல்லை. மலரை இறைவனுக்கு அளிக்க ஆவல் கொண்டே கதறியது. அதனால் இறைவன் வெகு வேகமாக ஓடி வந்தான். அப்படிப்பட்ட வனையே 'இராம!' என அழைத்தனர் என்கிறார் கம்பர். எனவே பக்தியுடன் மலரை அளிப்போரை இறைவன் காப்பாற்றுகிறான் என்பதை அறிகிறோம்.

அரசன் ஒருவன் வேண்டுபவர்க்கெல்லாம் வேண்டியதை அளித்து வறுமையடைந்தான். நாற்பத்தெட்டு நாள் உணவு கிடைக்காமல் கவலைப்பட்ட அவனுக்குச் சிறிது உணவும் தண்ணீரும் கிடைத்தன. அவற்றை மனைவி மக்களுடன் உண்ண ஆரம்பித்தபோது, ஓர் அந்தணன் உணவு கேட்டுவர, எல்லாவற்றிலுமே இறைவனைக் காணும் அந்த உத்தமன் தனது உணவில் பாதியை வந்தவனுக்கு அளித்து, மீண்டும் தான் உண்ணப் போனபோது, யாரோ ஒருவன் சில நாய்களுடன் வந்து, அரசனிடம் உணவு வேண்ட, அரசன் மறு பாதியையும் அவனுக்கு அளித்து, வெறும் தண்ணீரைப் பருக எண்ணியபோது, தாகத்தினால் தவித்த அவனுக் குத் தண்ணீரையும் அளித்தான். அவனைச் சோதிக்க மும்மூர்த்திகளே வேடம்புனைந்து வந்தனர். எனவே பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மூவரும் காட்சியளித்து, ''உனக்கு யாது வேண்டும்?'' எனக் கேட்டபோது, தனக்கு ஏதும் வேண்டாமல் அந்த மூவரையும் வணங்கினான், நற்கதி பெற்றான் என்பது ஸ்ரீமத் பாகவதத்தில் வரும் சிறு வரலாறு.

கண்ணப்பநாயனார் தமது வாயில் பொன்முகலி ஆற்றங்கரை நீரை நிரப்பி வந்து இறைவனுக்கு அபிஷேகம் செய்தார். சிவபெருமான், ''அவனது வாயே குடம். அவனது பற்களே கும்பரத்தினம். அவனது நாவே தண்ணீரில் இடப்படும் மலர். அவனது மீசை வழியாகத் தண்ணீர் நம் முடிமீது விழுவதை நாம் அவன் பவித்திரமான தருப்பை வழியாக அபிஷேகம் செய்வதாக எண்ணி மகிழ்கிறோம்'' எனக் கூறினார்.

இறைவனது சிந்தனையே இல்லாமல், பிரமாத மாக ஜபம் செய்தேன் என்றெல்லாம் ஆர்ப் பாட்டம் எதற்கு?

> நகரமருள் புரிந்து நான்முகற்குப் பூமேல்
> பகரமறை பயந்த பண்பன்—பெயரினையே
> புந்தியால் சிந்தியாது ஓதி உருவெண்ணும்
> அந்தியால் ஆம்பயன்அங்கென் ?

என்பது பொய்கையாழ்வார் கேள்வி.

''கற்றுக்கொள்வதற்கு வாயும் நாவும் தந்துள் ளான். பூசிக்கப் பூவும் நீரும் தந்துள்ளான். பூசை செய்ய இறைவன் உள்ளான். பூசிக்க நாமும் உள்ளோம். எனவே யமனது கோபம் நமக்கு ஏது? அது நம்மை என்ன செய்யும்?''

> கற்றுக் கொள்வன ; வாயுள ; நாவுள ;
> இட்டுக் கொள்வன ; பூவுள நீருள ;
> கற்றைச் செஞ்சடையான் உளன் நாம் உளோம்;
> எற்றுக்கோ நமனால் முனிவென்பதே!

என்று கேட்கிறார் அப்பர் சுவாமிகள். எனவே இலையோ மலரோ நீரோ அன்புடன் அளித்தால் இறைவன் ஏற்று அருள்புரிகிறான். இந்த எளிய முறையான பூசையே போதும். ஆர்ப்பாட்டத்தை இறைவன் கேட்கவில்லை. ''பக்தியுடன் இலையோ மலரோ தண்ணீரோ அளிக்கும் அடியவரின் பூசனையை நான் விரும்பி ஏற் கிறேன்'' என்பது கண்ணன் வாக்கு.

இந்த எளிய முறையில் உயர்ந்த எண்ணங் களுடன் பக்திசெய்து பரமனின் அருளைப் பெறக் கண்ணனை வேண்டுவோமாக! △



# ஆத்ம தத்துவம்

சுவாமி அமரானந்தர்

விசாரத்தாலன்றி பிரம்மஞானம் உண்டாகாது. ஆத்மிக நூல்கள் படித்தல், அன்னதானம் செய்தல், தவங்கள் இயற்றுதல், மந்திரங்கள் ஓதுதல், ஆசாரமாக வாழ்க்கை நடத்துதல், யாகங்கள் செய்தல் ஆகியவை நன்மை அளித்தாலும் தன்னைத் தான் அறிவது விசாரத்தால் வருமேயன்றி இந்தக் கருமங்களால் அடைய முடியாது.

தனக்கு அந்நியமாக இன்னொரு பொருள் இருக்கிறது என்று எண்ணுகிற வரையில் அந்த ஜீவன் அஞ்ஞானத்தில் இருக்கிறான் என்பது வேதத்தின் கோட்பாடு. தனக்கு அந்நியமாக இன்னொரு பொருளை வைத்து, அதை அடைய வேண்டிச் சாஸ்திரங்களைப் படித்தல், அன்ன தானம் செய்தல் முதலான மேலே சொன்ன காரியங்கள் செய்யப்படுகின்றன. அவற்றின் மூலம் சித்தசுத்தி ஏற்பட்டு, அடைய வேண்டிய இலட்சியத்தை அடைந்தாலும் அது பூரண ஞானமாகாது. தனக்கு அந்நியமாக இன்னொன்று இருப்பதாக எண்ணி அதை அடைவது தன்னைத் தான் அறிந்தது ஆகாது. தனக்கு அந்நியமாக இன்னொரு பொருள் இருக்கிறது என்ற எண்ணம் உள்ள வரையில் பயம் அவனை விட்டு நீங்குவதில்லை.

எனவே, அவன் பூர்ண விடுதலை அடைவதில்லை. தன்னை ஆராய்ந்து அறிய முடியாத அஞ்ஞானி தன்னையே இன்னொன்றின் மேல் சுமத்தி அதை அடைய ஆன முயற்சிகளெல்லாம் எடுக்கிறான். கஸ்தூரி மான், தன்னிடமுள்ள கஸ்தூரியின் மணம் வேறு வெளியிடத்திலிருந்து வருவதாக எண்ணி அதைத் தேடிக் காடெல்லாம் அலைவது போன்றது இது. இங்ஙனம் தேடித் தேடி அலைந்து முடிவு காணமல் கடைசியாகத் தன்னைத் தான் விசாரிப்பது உண்டாகிறது. தன்னை விசாரிப்பதனாலேயே முடிவான உண்மையாகிய தானே சகலமும் ஆன பிரம்மசொருபம் என உணர முடியும் என்பது வேதவாக்கியம். மற்றக் கருமங்கள் எல்லாம் கடைசிவரை உதவுவதில்லை. ஆகையால், விசாரம் ஒன்றே தன்னைத் தான் அறிவதற்கு முடிவான உபாயமாகும்.

''பரமார்த்த தத்துவமானது கண்களினாலோ, வாக்கினாலோ, மற்ற இந்திரியங்களினாலோ கிரகிக்கப்படுவதன்று; கர்மத்தாலும் தவத்தாலும் அந்தப் பரவஸ்துவை அறிந்துகொள்ள முடியாது. ஞானப் பிரசாதத்தால் ஒருவனது உள்ளம் தூய்மையாகிறது. அப்பொழுது தியானத்தின் வாயிலாக, அவயவங்களற்ற பரமனை அனுபூதியில் அவன் அறிகிறான்'' என்று முண்டக உபநிஷதம் கூறுகிறது.

இங்கும் அப்படிச் சத்சித் ஆனந்தத்தில்
  இடர் சுடர் பொய் மூன்றும்
தங்கும் மாயையின் கற்பிதம் அன்றியே
  சகச வாஸ்தவம் அன்றே
பங்கம் ஆகும் அஞ்ஞானத்தைக் கருமங்கள்
  பகை செயாது உறவாக்கும்
துங்க ஞானமே கரும அஞ்ஞானத்தைச்
  சுடுகின்ற நெருப்பு ஆமே.

—கைவல்ய நவநீதம், 70

[இங்கும் அப்படி—முன் சொன்ன உதாரணப் படி இங்கும்; இடர்—இடக்கு, துக்கம்; சடம்—ஜடம், அறிவின்மை; தங்கும் — ஆரோபமாய் இருக்கும்; துங்க—உயர்வான.]

தூய பளிங்கில் நிறம் ஆரோபிக்கப்பட்டது போன்று, களங்கமில்லாத தன் நிஜசொருபமான சச்சிதானந்தத்தின் மேல் ஆரோபிக்கப்பட்டிருக்கும் பொய், அறியாமை, துக்கம் மாயையின் கற்பிதம் அன்றி வாஸ்தவமல்ல. கற்பிதமான அறியாமையை நீக்குவதற்கு, சத்கருமங்கள் ஓரளவு உதவியாய் இருக்கின்றன. வழிபாடு, வந்தனை, தானதருமங்கள் முதலிய சத்கருமங்கள் செய்வதனால் ஓரளவு விவேகம் விரிவடைகிறது. அதனால் அறியாமை அவனை மிகவும் பந்தப்படுத்துவதில்லை. அந்தக் கருமத்தினூடே அறியாமை ஒத்துப்போகிறது; அதாவது அறியாமை அவனை மிகத் துன்பத்துக்கு ஆளாக்குவதில்லை. ஆனால் மேலான விசார ஞானமே, பொய் அறியாமை துக்கம் ஆகிய வற்றை நீக்கி, சச்சிதானந்தமாகிய தன் சுயருபத்தை உணர வைக்கும்.

வாக்குக்கு எட்டாத பிரம்மசொரூபம் வாக்கால் விளக்கப்படும்போது சச்சிதானந்தம் எனப் பெறுகிறர். அதாவது சத்து சித்து ஆனந்தம் என்பது அதன் முதல் விளக்கமாகும். சத்து, சித்து, ஆனந்தத்திற்கு நேர்மாருக இருப்பது மித்தை அதாவது பொய், அறியாமை, துக்கம் ஆகிய மூன்றும் ஆகும். ஜீவாத்மா ஒருவன் தானே சச்சிதானந்த சொரூபம் என உணருவதற்குத் தடையாக இருப்பது அதாவது தன் யதார்த்த சொரூபத்தை மூடி மறைப்பது போன்று தென்படுவது ஜகன் மோகினியாகிய மாயாசக்தியின் பொய்த்தோற்றங்களான உடல் உலகமும், அதில் இருக்கும் அசத்து அறியாமை துக்கங்களேயாம். கயிற்றின் மேல் ஆரோபிக்கப்பட்ட பாம்பு போன்றது அது. பாம்பாகத் தென்படும்போது பயம் உண்டாகிறது. கயிருகத் தென்படும்போது அந்தப் பயம் நீங்கிவிடுகிறது. உலகை உண்மையாக வைத்துக் காணும்போது அந்தப் பொய்த் தோற்றத்தில் சுக துக்கங்கள் அனுபவிக்கப் படுகின்றன. தன் அகண்டான்ம சொரூபமாகக் காணும்போது சுகதுக்கங்கள் நீங்கிவிடுகின்றன.

பொய்த் தோற்றங்களான சுக துக்கங்கள் உண்மையில் தன் நிஜ சொருபத்தை மூடி மறைப்பதில்லே; மூடி மறைக்கவும் முடியாது. ஏனெனில், தன் யதார்த்த சொரூபமே சுத்த ஞானம் ஆகிறது. சைதன்யம் வேறு, தன் நிஜ சொரூபம் வேறு அல்ல. தன் உண்மைச் சொரூபமான ஞானத்தின் எதிரில் மாயாசக்தி அஞ்சி ஓடும். இருள் சூழ்ந்த அறையில் விளக்கு வந்தால், அந்த இருட்டு மறைந்துவிடுவது போன்றது அது. உண்மையில் இருட்டு என்று ஒன்று தனியாக இல்லே. மனிதனுக்கு இருட்டாக இருப்பது, ஆந்தை புலி பூனே முதலியவற்றிற்கு நல்ல வெளிச்சமாக இருக்கிறது. வெளிச்சத்தின் மறு தோற்றமே இருட்டு. சூரியனிடத்தில் இருள் இல்லே. சூரியனின் ஒளி தடைப்பட்டிருக்கும்போது இருள் காணப்படுகிறது. உண்மையில் இருள் இல்லே. இங்ஙனம் கற்பிதமாக இருக்கும் மாயை என்ற அறியாமையை நீக்கி, ஆத்ம சுகம் பெற, தான தரும யக்ஞாதிகள் போன்ற சத்கருமங்கள் உதவியாய் இருக்குமே தவிர, அவையே நிறைஞானத்தைத் தந்துவிடா. மேலான ஆத்மவிசாரமே, சத்கருமங்கள் உட்பட எல்லாக் கருமபந்தங்களேயும், பஞ்சினே ஊழித்தீப் போல் சுட்டுச் சாம்பலாக்கித் தன் மயமான ஆத்மசொரூபத்தைப் பளிங்கு போன்று தெளிவாக உணர்த்தும். ☼

# செய்திகள்

* ஸ்ரீராமகிருஷ்ண மடம், ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் ஆகியவற்றின் உப தலேவர் **ஸ்ரீமத் சுவாமி பூதேஷானந்தஜி மகராஜ்** அவர்கள் ஜூன் 2-ஆம் நாள் இரவு சென்னேக்கு வருகிறர் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேம். அவர் சென்னே, ஸ்ரீராம கிருஷ்ண மடத்தில் ஜூன் 3, 4 தேதிகளில் தங்கியிருந்துவிட்டு ஜூன் 5-ஆம் நாள் கல்கத்தா திரும்ப இருக்கிறர்.

* தமிழ்நாடு, ஸ்ரீராமகிருஷ்ண — விவேகானந்த பக்தர்கள் மாநாடு மே 8, 9 தேதிகளில் மணல்மேட்டில் நடைபெற்றது.

சுவாமி சர்வக்ஞானந்தர், சுவாமி அவ்யயானந்தர், சுவாமி ஸ்ரீரங்கானந்தர், சுவாமி சோமானந்தர், சுவாமி கருணனந்தர், சின்மய சைதன்யா, வாசுதேவ சைதன்யா, ராகவேச சைதன்யா, திரு அவிஞசிலிங்கம், டாக்டர் சண்முகம், பேராசிரியர் சுப்ரமண்யம் ஆகியோரும் மற்றும் பலரும் உரை நிகழ்த்தினர்.

தமிழகத்தின் பல பாகங்களிலிருந்தும் வந்திருந்த பக்தர்கள் இந்த மாநாட்டில் கலந்து கொண்டனர்.

* சென்னே, கோபாலபுரம் சர்வோதய நிலேயம் விநோபாவின் கீதைப் பொன்விழா ஆண்டை மே 21-ஆம் நாள் சிறப்பாகக் கொண்டாடியது. சுவாமி கமலாத்மானந்தர் கீதையைக் குறித்துச் சிறப்புரை நிகழ்த்திஞர்.

